மலர் 18 இதழ் 7

# கல்கி

பொருளடக்கம்

புரட்டாசி 1

செப்டம்பர் 16, 1956


இந்த சூஎஸ் பிரச்னையை என்னால் தீர்க்க முடியவில்லை. நீ வேண்டுமானால் முயற்சித்துப் பார்!
ஐ.நா.சபை
மென்ஜீஸ் கமிட்டி
எகிப்து



மலர் 16 இதழ் 7

தமிழ்த்திரு நாடு தன்னைப் – பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி புரட்டாசி 1

# தேர்தல் முறை

தேர்தலுக்கு நிறுத்தும் அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் வேலை வெகு மும்முரமாக நடந்து வருகிறது.

காங்கிரஸ் காரியஸ்தர்கள் ஆங்காங்கே சுற்றுப் பிரயாணம் செய்து ஆசாமிகளை அளந்து வருகிறார்கள். அவர்கள் அளக்கும் அளவுகோலைப் பற்றி ஒரு வார்த்தை.

நாட்டுக்கு யார் நல்லவர்கள் என்பதல்ல அவர்களுடைய ஆராய்ச்சி; நம் தலைவருக்கு யார் நல்லவர்கள் என்பதுதான் அவர்களுடைய கேள்வி.

அதாவது காங்கிரசுக்கு அல்ல இப்போது திரட்டும் கூட்டம். தற்போது பதவியிலிருக்கும் குழுவினர் இன்னும் நீடித்துப் பதவியிலிருக்கவே இந்த முயற்சி.

இதுவும் வீண் முயற்சி. எல்லாம் முடிந்த பின் பொறாமையும் போட்டியும் ஆரம்பமாகும். குழுவினுக்குள் குழு உற்பத்தியாகும்.

காங்கிரசின் போக்கு இவ்வாறே போய்க் கொண்டிருந்தால், வெகு சீக்கிரமே பாகிஸ்தானில் ஏற்பட்டிருக்கும் அரசியல் நிலைமை இங்கேயும் ஏற்பட்டு விடும் என்பது நிச்சயம்.

பல ஆண்டுகளுக்குப் பின் வரும் மக்களுக்கென்று நம் தேசத்தில் அணைகளும் ஏரிகளும் கட்டி வருவது எப்படிப் புத்திசாலித்தனமும் தேச பக்தியும் ஆகுமோ அவ்விதமே, எதிர்காலத்துக்காகக் காங்கிரஸ் கட்சியின் நிர்வாகத்தையும் அணை கட்டிக் காக்க வேண்டும். இல்லாவிடில் ஆற்றிலும் ஏரியிலும் உள்ள நீர் வடிந்து போய்ப் புல்த்தரையாகிவிடும். காங்கிரசைப் பால் கறக்கும் பசுவாக வைத்துக் கொண்டு எவ்வளவு படி பால் கறக்கும் என்று பார்த்துப் பசுவை விலைக்கு வாங்க வருகிறார்கள். பசுவுக்குத் தீனி போடுவதற்கு வழி தேட வேண்டும். தீனி போடுகிறவர்கள் கணக்கு வெகு வேகமாகக் குறைந்து சூன்யமாகி வருகிறது. இந்த ஏழைப் பசு எவ்வளவு நாள் தாங்கும்?

ஜமீன்தாரி ஒழிப்புக்குச் சட்டம் செய்தோம். காங்கிரஸ் கட்சியும் ஒரு புது ஜமீன்தாரி நிலைக்கு வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இல்லாவிடில் மக்கள் கஷ்டப்படுவார்கள்; "சுயராஜ்யம் வந்தாலும் வந்தது; சுகமில்லை" என்பார்கள்.

ஒரு காலத்தில் "காங்கிரஸ்காரர்" என்றால் நம்பலாம்; பொய் சொல்ல மாட்டார்; திருடமாட்டார்; யோக்கியர் என்று எந்த ஊரிலும் எந்தக் கூட்டத்திலும் நம்பிக்கையிருந்தது. இப்போது 'மற்றவர்களைவிட நாம் நல்லவர்கள்' என்று மட்டும் சொல்லிக் கொள்ள முடிகிறது. அதற்கும் தாழ்வாகவே பலர் பேசுவார்கள். அவ்வளவு தூரம் நாம் போகவில்லை. "மற்றவர்களைவிட நாம் யோக்கியர்கள்" என்பதற்குப் பதிலாக "நாம் யோக்கியர்கள்" என்று சொல்லிக்கொள்ளும் தகுதி அடையவேண்டும்.

'என்னுடைய வியாபாரம் செழிக்கும், என்னுடைய ஜாதியினர்களுக்கு உத்தியோகம் வாங்கித் தரலாம்' என்கிற ஆசையோடு வருகிறவர் எப்படிக் காங்கிரசைக் காப்பாற்றப் போகிறார்? இதையெல்லாம் யோசித்துப் பார்த்தால் இப்பொழுது ஒரு புது இயக்கமே ஆரம்பிக்க வேண்டியிருக்கும் என்று தோன்றுகிறது. சுயராஜ்யம் பெறுவதற்காக நாம் நடத்திய இயக்கம் வெற்றியுடன் முடிந்தது; சன்மார்க்கத்துக்காக நடத்த வேண்டிய இயக்கம் காத்திருக்கிறது!

யாரைக் கொண்டு இந்த இயக்கத்தை நடத்துவது என்பதுதான் கஷ்டமானபிரச்னை. சுயராஜ்யத்துக்காக வேட்கை கொண்டு தவித்துப் பாடினார் பாரதியார்: சன்மார்க்கத்துக்காகத் தவித்துப் பாடுபவர் ஒருவர் வேண்டும். ''அனைத்தையும் துறந்து விட்டு வாருங்கள்'' என்று காந்தி மகான் சுயராஜ்யப் படை திரட்டினார். ''அனைத்தையும் துறந்துவிட்டு வாருங்கள்'' என்று சன்மார்க்கப் படையை யார் திரட்டப் போகிறார்கள்?

## அஸ்திவாரம் அசைந்தது!

அஸ்திவாரமே கடகட வென்று அசையத் தொடங்கி விட்டது.

பாரத சர்க்கார் எந்தக் கொள்கையின் ஆதாரத்தின் பேரில், பி. ஸி. ஜி இயக்கம் நடத்தி வந்தார்களோ அந்தக் கொள்கையே தவறு என்று நிரூபணமாகி விட்டது.

அது மட்டுமல்ல; எந்த நிபுணரின் மொழிகளையும், கொள்கைகளையும் ஆதாரமாகக் காட்டிப் பாரத சர்க்கார் இயக்கம் நடத்தி வந்தார்களோ அதே பிரபல டாக்டர் ''பி. ஸி. ஜி யினால் பிரயோசனமே இல்லை'' என்று சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிச் சொல்லிவிட்டார்.

இதை யெல்லாம் சென்ற வாரம் ராஜாஜி தமது அறிக்கையில், மேலே குறிக்கப்பட்ட பிரபல டாக்டரான கரோல் பாமர் மொழிகளையே விரிவாக எடுத்துக் காட்டிப் பாரத சர்க்காரின் பி. ஸி. ஜி ஊசிக் குத்து எவ்வளவு அபத்தமானது என்பதை நிரூபித்திருக்கிறார்.

மக்களில் சிலருக்கு ஏற்கெனவே உடலில் டி. பி. கிருமி இடம் பெற்றிருக்கிறது. சிலருக்கு இல்லை.

டி. பி. கிருமிகளுக்கு உடலில் ஏற்கெனவே இடம் கொடுத்தவர்களை, டி. பி. நோயைத் தடுக்கும் சக்தி பெற்றவர்கள் (பாஸிடிவ்கள்) என்று தீர்மானித்து அவர்களுக்கு பி. ஸி. ஜி ஊசி குத்துவதில்லை.

உடலில் டி. பி. கிருமிகள் இல்லாதவர்களை (நெகடிவ்கள்) டி. பி. நோய் தாக்கினால் அதற்கு இலக்காகக் கூடியவர்கள் என்று கருதி அவர்களுக்கு பி. ஸி. ஜி குத்தி வருகிறார்கள். இந்தக் கொள்கையின் பேராதரவாளராக விளங்கியவர் பிரசித்தி பெற்ற கரோல் பாமர் என்னும் வைத்திய நிபுணர். இவர் உலக சுகாதார சங்கத்தின் பி.ஸி.ஜி பிரிவுத்தலைவர்.

இவர் அமெரிக்காவில் நான்கு ஆண்டுகள் தீவிர ஆராய்ச்சிகள் நடத்தினார்.

அதாவது, 1. டுபர்க்குலீன் பாஸிடிவ்கள் 2. டுபர்க்குலீன் நெகடிவ்கள், 3. பி. ஸி. ஜி ஊசி குத்தப் பெற்றவர்கள் என்று ஒரு வயது முதல் பதினெட்டு வயதுக்குட்பட்ட மக்கள் இனத்தை மூன்று பிரிவுகளாகப்பிரித்து நான்கு ஆண்டுகள் ஆராய்ச்சி நடத்தினார். தமது ஆராய்ச்சியின்பலனாக ஓர் முடிவுக்கு வந்தார்.

பாஸிடிவ்கள், அதாவது இயல்பாகவே தடுப்புச் சக்தி பெற்றவர்கள் என்று கருதப் பட்டவர்களிலேயே அதிகமாக டி. பி. நோய் காண ஆரம்பித்தது!

உடலில் டி. பி. கிருமிகள் இருந்தவர்களை, டி. பி. நோயிலிருந்து காப்பாற்றப்பட்டவர்கள் என்று கருதியது பெரும் தவறு என்பது கரோல் பாமருக்கு நிரூபணமாயிற்று.

இதனால் சர்க்கார் டி. பி. நோயிலிருந்து மக்களைக் காப்பாற்றும் சேவை செய்ய வேண்டுமென்று விரும்பினால், இதுகாறும் யாருக்கு உதவி தேவையில்லை, தடுப்புச் சக்தி பெற்றவர்கள் என்று கருதி வந்தார்களோ, அவர்களுக்குத்தான் முதலில் உதவியும் வைத்தியமும் செய்ய வேண்டியிருக்கிறது என்பது தெளிவாகி விட்டது!

ஆனால் பாரத சர்க்காரோ டி. பி. நோய் பெற்றவர்களை விட்டு, யாருக்குத் தொத்து ஏற்படவில்லையோ அவர்களுக்கு பி. ஸி. ஜி மூலம் டி. பி.யை ஓரளவு அளித்து வருகிறார்கள். எப்படியிருக்கிறது பாரத சர்க்காரின் சுகாதார சேவை!

ராஜாஜி அவர்கள் பலமுறை பல பெரிய டாக்டர்களின் ஆராய்ச்சியின் பேரில் பாரத சர்க்காரின் பி. ஸி. ஜி இயக்கம் பயனற்றது என்றும் ஏழை தேச மக்களின் உடல் ஆரோக்கியத்தைக் கெடுப்பதாகும் என்றும் கூறி விளக்கி யிருக்கிறார். இதைப் பாரத சர்க்காரின் சுகாதார மந்திரி கேட்கவில்லை.

ஆனால் பி.ஸி.ஜி விஷயத்தில் பாரத சர்க்காரின் வசிஷ்டராக விளங்கி வரும் வைத்திய நிபுணர் கரோல் பாமரே இப்போது பி.ஸி.ஜி உபயோகமற்றது என்று கூறிவிட்டார்!

இனியாவது, பாரத சர்க்கார் இந்த பி. ஸி. ஜியை விட்டுத் தொலைத்துத் தலை முழுகுவார்கள் என்று நம்புகிறோம்.

## ஏன் நிராகரிக்க வேண்டும்?

இலங்கை சர்க்கார் ஜனத்தொகை கணித டைரக்டர் சென்ற வாரம் விடுத்துள்ள அறிக்கை இலங்கைத் தமிழ் மக்களின் கோரிக்கைக்கு ஆக்கம் அளிப்பதாக இருக்கிறது. ''1956-ம் வருஷம் ஜூன் மாதம் முடிய எடுத்துள்ள இலங்கை ஜனத்தொகைக் கணக்கின் படி, இலங்கையின் மொத்த ஜனத்தொகை 85,89,000 ஆகும். அதில் 60,04,000 பேர் சிங்களவர்கள். வம்சாவளி நியதிப்படி இலங்கைப் பிரஜைகளான தமிழர்களின் தொகை 9,63,000. இவர்களைத் தவிர, இன்னும் 9,43,000 தமிழர்களுக்குப் பிரஜா உரிமை அளிக்கப்படவில்லை'' என்று ஜனத்தொகை கணித டைரக்டரின் அறிக்கை கூறுகிறது. இலங்கை சர்க்காரின் இந்தக் கணக்கின்படி பார்த்தாலும், இலங்கையில் சுமார் இருபது லட்சம் தமிழர்கள் இருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது. எனவே, மொத்த ஜனத்




பி.ஸி.ஜி ஊசி போடுவதன் மூலம் க்ஷய நோய் வராமல் பாதுகாப்பு அளிக்க முடியும் என்று நம்பிய நிபுணர்களில் முதல்வரான டாக்டர் கரோல் பாமர் தாம் நடத்திய பரிசோதனைகளின் பலனாக அக்கருத்தை இப்போது மாற்றிக்கொண்டு விட்டார். —செய்தி.

தொகையில் நாலில் ஒரு மடங்கு பேர் கொண்ட ஒரு மாபெரும் சமூகத்தினருக்குப் பிரஜா உரிமையோ, மொழி உரிமையோ அளிக்க இலங்கை சர்க்கார் தயங்குவதற்குக் காரணமே இல்லை. சிங்கள மன்னர்கள் ஆண்ட காலத்திலும், சிங்களக் கல்லூரிகளிலும் தமிழ் வெகு காலமாக முக்கிய ஸ்தானம் வகித்து வந்திருக்கிறது. போர்ச்சுகீசியர்களும், டச்சுக்காரர்களும், பிரிட்டிஷாரும் இலங்கையை ஆட்சி புரிந்தபோதும் அவர்கள் தமிழ், சிங்களம் இரண்டு மொழிகளையும் பொதுஜன மொழிகளாக அங்கீகரித்திருந்தனர். இவ்விரண்டும் இலங்கை ராஜாங்க மொழிகளாக அங்கீகரிக்கப்பட்டு இலங்கை சட்டசபையில் 1945–ம் ஆண்டில் ஒரு தீர்மானம் நிறைவேறியதையும் கொழும்பில் உள்ள தமிழ் மொழி உரிமைப் பாதுகாப்பு சங்கத்தினர் தங்கள் அறிக்கையில் சுட்டிக் காட்டியுள்ளனர். இலங்கைத் தமிழர்களைக் காட்டிலும் குறைந்த சதவிகிதமுள்ள சிறுபான்மையோரின் மொழி உரிமையை உலகில் உள்ள பல முக்கிய நாடுகளும் அங்கீகரித்திருக்கையில், ஏற்கெனவே வெகு காலமாக ராஜாங்க மொழியாக இருந்து வந்த பாஷையை இலங்கை சர்க்கார் ஏன் நிராகரிக்க வேண்டும்?

## மலேயா தமிழர்களின் கோரிக்கை

இலங்கையைப் போல் மலாய் நாட்டின் இன்றையச் செல்வச் செழுமைக்குத் தமிழ்த் தொழிலாளர்களின் உழைப்புத்தான் காரணம் என்பதை யாரும் மறுக்க முடியாது. மலாய் நாட்டில் உள்ள சுமார் எழுநூறு ரப்பர்த் தோட்டங்களிலும் தமிழ்த் தொழிலாளர் தான் வேலை செய்து வருகிறார்கள். மேற்படி ரப்பர்த் தோட்டங்களே மலாய் நாட்டின் உயிர்நாடியாகவும் செல்வக் களஞ்சியமாகவும் இருந்து வருகின்றன.

கூடிய சீக்கிரம் அந்த நாட்டின் வருங்கால அரசியல் திட்டம் உருவாகப் போகிறது. அத்திட்டத்தில், மலேயா தமிழர்களுக்கு விசேஷப் பாதுகாப்புகள் அளிக்க வேண்டுமென்று கோரி, சில தினங்களுக்கு முன் நடந்த அகில மலேயா தமிழர்கள் மகாநாட்டில் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். மலேயாவின் முன்னேற்றத்துக்காகத் தலைமுறை தலைமுறையாய் உழைத்து வந்துள்ள தமிழர்களுக்கு அந்த நாட்டில் இன்னும் ஒரு உயர்நிலைப் பள்ளிகூட இல்லை என்பதைக் கவனிப்பவர்கள், அங்கு தமிழர்கள் எந்த நிலையில் இருந்து வருகிறார்கள் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். மலாய் நாட்டில் உள்ள தமிழர்கள் சுதந்திர மலேயாவில் தங்களுடைய உரிமைகளை இழக்காமலிருக்க வேண்டுமாயின், அவர்கள் ஒற்றுமையுடன் தங்கள் கோரிக்கைகளை இடைவிடாது வற்புறுத்தி வரவேண்டும். அதற்கு முதற்படியாக அகில மலேயா தமிழர் மகாநாடு கூட்டப்பட்டது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். சென்னைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரான ஸ்ரீ முத்து ராஜக்கண்ணனார் மலேயா சர்வகலாசாலையில் இந்திய மொழி இலாகா தலைவராக நியமிக்கப்பட்டிருப்பது மற்றொரு நல்ல அறிகுறியாகும்.



17 கதிரனும் மருதையும்

# அபலை அஞ்சுகம்

நடு நிசி வேளையில் அந்த இருண்ட பாதையில் திருடர்களின் குழுவில் சில நாட்கள் இருந்து பழகியவளல்லவா அவள்? வழிப்பறிக் கொள்ளையையே தங்களுடைய ஜீவனமாகக் கொண்டவர்கள் இப்படிப்பட்ட இடங்களிலேயே இரவு வேளையில் பதுங்கி இருந்து பாதசாரிகளை வழிமறித்துக் கொள்ளையடிப்பது வழக்கம் என்பதும் அவளுக்குத் தெரியும். தன்னை வழி மறித்து நிற்கும் இருவர்கள் அப்படிப்பட்டவர்கள்தான் என்று அவள் எளிதில் உணர்ந்து கொண்டாள். அவர்கள் போலீஸ்காரர்கள் அல்ல என்பதை அறிந்த பின் அவளுக்குச் சிறிது நிம்மதி ஏற்பட்டாலும் அவர்கள் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் என்பதை உணர்ந்தபோது அவளுக்குச் சிறிது கலக்கம்தான் ஏற்பட்டது. தன்னை வழிமறித்தது தனக்குத் தெரிந்தவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்று அவள் நினைத்தாள். ஏனென்றால் எந்த வழிப்பறிக் கொள்ளைக்காரனும் அங்காடிப் பேட்டைக்கு வந்து அறிமுகமாகாமல் இருக்க முடியாதல்லவா? ஏன், அவர்கள் அங்காடிப் பேட்டையிலேயே வசிப்பவர்களாகவும் இருக்கக் கூடும். அந்தப் பேட்டையில் உள்ளவர்களிடம் மிகவும் வெறுப்புக் கொண்டிருந்த அஞ்சுகம் மறுபடியும் அவர்களிடமே வந்து சிக்கிக் கொள்ள

நேர்ந்ததே என்ற மனக் கலக்கம் தான் கொண்டாள். அவளுக்கு எதிரில் இருளில் சரியாக முகமும் உருவமும் தெரியாத வண்ணம் நின்று கொண்டிருந்த இருவரில் ஒருவன் மற்றவனைப் பார்த்து, ''ஏய்! இது யாரோ பொம்பளை போல் இருக்குது! எங்கே தீக் குச்சியைக் கொளுத்து, பார்ப்போம்'' என்று கூறினான்.

மற்றவன் கட கட வென்று சிரித்து விட்டு, ''ஏய்! இவ பொம்பளையேதான். இந்த இருட்டிலேயும் இந்தப் பாதையிலே தனித்து ஒரு பொம்பளை வரான்னா அவ ரொம்பத் துணிச்சல்காரியாகத் தான் இருக்கணும்'' என்றான்.

நடுங்கிய வண்ணமே நின்று கொண்டிருந்த அஞ்சுகத்துக்கு அந்தக் குரல்கள் என்றுமே அவள் கேட்டிராத குரலாகத் தான் தோன்றியது. அவர்கள் தனக்குத் தெரிந்தவர்கள் இல்லை என்பதை எளிதில் அறிந்து கொண்டாள். அவளைப் பார்த்தால் அவர்களே மனம் இரங்கி விட்டாலும் விட்டு விடுவார்கள். ஒரு வேளை அவர்கள் தன் துயரக் கதையை அறிந்து உதவி செய்தாலும் செய்வார்கள். அந்தக் கணம் நடுங்கிக் குழம்பிய அவள் மனத்தில் இப்படிச் சில எண்ணங்கள் எழுந்தன.

அவர்களில் முன்னதாகப் பேசியவன் சிறிது கோபத்தோடு, ''ஏய்! கதை



யெல்லாம் அப்புறம் இருக்கட்டும், முதலில் தீக்குச்சியை எடுத்துக் காட்டு. இவள் முகத்தைப் பார்க்கணும்'' என்றான் ஆத்திரத்தோடு.

சட்டென்று தன் பையிலிருந்த தீப்பெட்டியை எடுத்து ஒரு குச்சியை எடுத்துக்கொளுத்தி அஞ்சுகத்தின் முகத்துக்கு நேராகக் காட்டினான் மற்றவன்.

அந்தச் சிறிய வெளிச்சத்தில் தன்னை வழிமறித்தவர்கள் போலீஸ்காரர்கள் அல்ல என்று தெரிந்தவுடனேயே அஞ்சுகத்தின் பதைபதைப்பு சிறிது குறைந்தது. அந்த இருண்ட பாதையில் தீக்குச்சி கொளுத்தப் பட்ட சிறிது வெளிச்சத்தில் தன் எதிரில் நின்ற அந்த இரு மனிதர்களின் முகங்களையும் அவள் பார்க்க முடிந்தது. கள்ளர்கள்—கொள்ளை கொலைக்குக் கூட அஞ்சாத முரட்டுத்தனம்தான் அவர்கள் முகத்தில் இருந்தது. எப்படியோ அவர்கள் பக்கத்துக் கிராமப்புறத்திலிருந்து வந்த வழிப்பறிக் கொள்ளைக் காரர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதை அவர்கள் பேச்சிலிருந்து அவள் மிக எளிதாக அறிந்து கொண்டாள். நகரத்தில் பக்காத் திருடர்களிடையே வசித்துக் காலத்தைக் கழித்துக் கொண்டு வந்த அவளுக்கு அது எவ்வித பயத்தையோ நடுக்கத்தையோ கொடுக்க வில்லை. இந்தப் பாதையில் தனக்குப் போலீஸாரினால் ஆபத்து நெருங்கி இருக்கும் இந்தத் தருணத்தில் அந்த வழிப்பறிக் கொள்ளைக்காரர்களிடம் சிக்கிக் கொண்டதும் ஏதோ தன்னுடைய அதிர்ஷ்டமாக இருக்க வேண்டுமென்று அவள் நினைத்தாள். அவளிடம் ஏதேனும் பொருள்கள் இருந்தாலல்லவா அவர்கள் அவளைத் தொந்தரவு செய்யப் போகிறார்கள்? தவிர முரட்டுச் சுபாவம் கொண்ட கள்ளர்களானாலும் அவர்களுக்கும் தன்னைப் போன்ற ஒரு அனாதையிடம் சிறிதாவது இரக்கம் ஏற்படாமல் போகாது என்று எண்ணினாள். இருப்பினும் அவளுடைய இளமைப் பருவம், அழகு இவைகள் அந்தக் கள்ளர்கள் மனத்தில் விஷமத்தனமாகத் துராசையை ஏற்படுத்தும் அல்லவா? அவர்களிடமிருந்து அவள் தன் கற்பை எப்படிக் காப்பாற்றிக் கொள்ள முடியும்? இதை எண்ணும்போதுதான் அவள் மனத்தில் சிறிது திகில் ஏற்பட்டது. எப்படியேனும் தன்னுடைய சாமர்த்தியத்தால் அவர்களை ஏமாற்றி விட்டு, அவர்கள் உதவியுடனேயே தலைமறைவாக வாழலாம் என்று அவள் தீர்மானித்தாள்.

''ஏ, குட்டி! நீ யாரு?'' என்று கேட்டான் ஒருவன்.

''நான் ஒரு அனாதை'' என்றாள் அவள் பயந்த குரலில் மெதுவாக.

''அனாதையா? பார்த்தால் அப்படித் தெரியலையே?'' என்றான் இன்னொருவன்.

''உங்களுக்குத் தெரியாவிட்டால் நான் அதற்கென்ன செய்வது? நான் அனாதைதான். நான் அனாதை போல் உங்கள் கண்களுக்குப் படாவிட்டால் அது என் குற்றமா? என்னைப் படைத்த கடவுளின் குற்றம்'' என்றாள்.

முதலில் பேசியவன் கலகலவென்று சிரித்தான். ''அது வாஸ்தவம். இந்தக் கடவுள்தான் ரொம்பக் குற்றம் செய்கிறான். பார்த்தால் நீ ரொம்ப அழகா இருக்கே. இந்த இருட்டிலே இந்தப் பாதை வழியா எங்கே போறே?'' என்று அவன் வினவினான்.

''நான்தான் அனாதையா யிற்றே. நான் போவதற்கு ஓர் குறிப்பான இடமும் கிடையாது. எங்காவது போய்க் கொண்டே இருப்பேன்!'' என்றாள்.

''சரிதான். வேடிக்கையாய் இருக்குதே? போகட்டும், உன் பெயர் என்ன?'' என்றான் மற்றொருவன்.

''என் பெயர் அஞ்சுகம்.''

முதலில் பேசியவன் இடி இடி என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

## ''அலை ஓசை''க்கு அகாடமிப் பரிசு

பண்டித நேருஜி தலைமையில் சிறப்பாக நடைபெற்று வரும் தில்லி சாகித்ய அகாடமி நிர்வாகஸ்தர்கள் கூடி ஒரு மகிழ்ச்சிகரமான முடிவை வெளியிட்டிருக்கிறார்கள். 1953-ம் ஆண்டிலிருந்து 1955-ம் ஆண்டு வரை மூன்று வருஷம் வெளியாகியுள்ள இந்திய பாஷை இலக்கியங்களில் மிகச் சிறந்த பன்னிரண்டு நூல்களைத் தேர்ந்தெடுத்து ஐயாயிரம் ரூபாய் பரிசு வழங்கியிருக்கிறார்கள். அத்தகைய பரிசு ஒன்று தமிழ் இலக்கியத்துக்கும் கிடைத்திருக்கிறது. பேராசிரியர் கல்கி அவர்கள் நமது 'கல்கி' பத்திரிகையில் தொடர்ந்துஎழுதிவந்த 'அலைஓசை' என்னும் அற்புத இலக்கியத்துக்கே அந்தப் பரிசு கிடைத்திருக்கிறது என்பதை அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம்.


Kodak
Kodak
EKTACHROME
Kodak
EKTACHROME
E 120

''நல்ல அழகான பேரு. உருவத்துக் கேற்ற பேரு. உன்னைப் போல ஒரு பெண்ணை எதிர்பார்த்துத்தான் நானும் இத்தனை நாளாகக் கல்யாணமே செய்துக்காமல் இருந்தேன்'' என்றான்.

''நானும்தான் கல்யாணமே செய்து கொள்ளாமல் இருக்கேன்'' என்று கூறினான் மற்றவன்.

அஞ்சுகத்துக்கு அதைக் கேட்டுச் சிரிப்பாக இருந்தது. அவர்கள் வார்த்தைகளின் மூலம் அவர்களின் உள் அந்தரங்கத்தை அறிந்து கொண்டது அவளுக்குச் சிறிது அச்சத்தை விளைவித்தாலும் அவர்கள் இருவருக்கும் இடையே இருந்து அவர்களுக்குள் மனஸ்தாபத்தைக் கிளறி விட்டுத் தன்னுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ள அது ஒரு நல்ல வாய்ப்பாகத் தோன்றியது. அப்பொழுது அவர்களுக்குள் சண்டை ஏற்படாமல் சமாதானப்படுத்தி அவர்கள் ஆதரவோடு தான் எங்கேனும் தலை மறைவாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். ''நானும் ரொம்ப நாட்களாகச் சரியான புருஷன் கிடைக்கவில்லையே என்று ஏங்கித்தான் கல்யாணமே செய்து கொள்ளாமல் காலத்தைக் கடத்தி வருகிறேன். கல்யாணம் என்ன பிரமாதம்? கல்யாணம் ஆவதற்கு முன்னால் ஒருவரோடு ஒருவர் பழகித் தெரிந்து கொள்ள வேண்டாமா? உங்களை எனக்குத் தெரிய வேண்டாமா?'' என்றாள்.

''அது வாஸ்தவம். உன்னையும் நாங்கள் தெரிந்து கொள்ளலாம். எங்கள் இரண்டு பேர்களில் யார் நல்லவர்கள் என்று உனக்கும் தெரிந்து விடும்'' என்றான் ஒருவன்.

''அதுதான் சரி. அப்படியென்றால் நீ எங்கள் பின்னால் வா. மற்றவைகளையெல்லாம் அப்புறம் பேசிக் கொள்வோம்'' என்றான் மற்றொருவன்.

அஞ்சுகம் அவர்களோடு நடந்தாள். அவள் தப்பி ஓடாத வண்ணம் பார்த்துக் கொள்கிறவர்கள் போல் அவளுக்கு முன்னால் ஒருவனும் பின்னால் ஒருவனுமாகச் சென்றார்கள். ஆகாயத்தில் இருந்த நட்சத்திரங்களினால் ஏற்பட்ட சிறு ஒளியைத் தவிர அந்த இருண்ட பாதையில் வேறு ஒளியே இல்லை. முன்னால் சென்றவன் இருள் மிகுந்திருந்த இடங்களில் நெருப்புக் குச்சியைக் கொளுத்தி வெளிச்சம் காட்டிக் கொண்டே போனான். அந்தப் பாதையில் அவர்கள் சிறிது தூரம் நடந்து போன பின் மரங்கள் நிறைந்த தோப்பு ஒன்றில் நுழைந்து நடந்தனர். அந்தத் தோப்பைக் கடந்ததும் திடல் போல் இருந்த ஒரு இடத்தில் இரண்டு மூன்று குடிசைகள் இருந்தன. அக்குடிசைகளில் 'மினுக் மினுக்' என்று விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. அந்த இடம்தான் அவர்கள் வசிக்கும் இடம் என்பதை அவள் எளிதில் உணர்ந்துகொண்டு விட்டாள்.

அவர்கள் அந்தத் திடல் நடுவே இருந்த ஒரு குடிசையை அடைந்து அதன் கதவை மெதுவாகத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தனர். அஞ்சுகம் தயங்கியபடியே குடிசைக்கு வெளியே நின்றாள்.

''ஏன், வெளியே நிக்கறே? வா, உள்ளே'' என்றான் ஒருவன்.

''இன்னும் வெளியே யாரு?'' என்று உள்ளிருந்து ஒரு குரல் எழுந்தது. அது வயது முதிர்ந்த ஒரு பெண்மணியின் குரல் என்பதை அஞ்சுகம் உணர்ந்து கொண்டாள்.

''அதுவா? உன் மருமகள்'' என்றான் அவர்களில் ஒருவன் பெருமையாக.

அதற்குள் அஞ்சுகம் குடிசைக்குள் வந்து நின்றாள். குடிசைக்குள் ஒரு சிறு சிம்னி விளக்கு எரிந்து கொண்டிருந்



திருவாரூர் டாக்டர் டி. வி. அய்யாசாமியின் குமாரர் ஸ்ரீ டி.ஏ. நாராயணஸ்வாமி எம். பி. பி. எஸ். பி. எஸ்ஸி(சயன்ஸ்)பி.இ. அவர்கள் எஃகுத் தொழிலில் விசேஷப் பயிற்சி பெறுவதற்காக இந்திய சர்க்காரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, சென்ற 4—9—56 அன்று பம்பாயிலிருந்து ருஷ்யாவுக்குப் புறப்பட்டுச் சென்றார்.

தது. விளக்குக்குச் சமீபமாகச் சுமார் ஐம்பது வயது நிறைந்த கிழவி ஒருத்தி உட்கார்ந்திருந்தாள். அவளே அழைத்து வந்திருந்த அந்த இரு வழிப்பறிக் கொள்ளைக்காரர்களின் முகத்தையும், உருவத்தையும் அப்பொழுது தான் அவள் சரியாகப் பார்க்க முடிந்தது. அவர்கள் இருவரும் உயரம், பருமன், முகஜாடைகளில் ஒருவரை யொருவர் ஒத்தாற் போல் இருந்தனர். அவர்கள் வயதிலும் ஒத்தவர்களாகவே தான் தோன்றினர். அவர்கள் இருவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இரட்டையர்களாக இருப்பார்கள் என்று எவரும் எளிதாக நினைக்கும்படியாகத்தான் இருந்தது. அவர்களுக்கு வயது கிட்டத்தட்ட முப்பதுதான் மதிக்கலாம். அஞ்சுகம் அங்கு வந்ததுமே அவர்கள் மலைக்குறவர் ஜாதியைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்று அறிந்து கொண்டாள். "இது யாரு? எங்கிருந்து அழைச்சுக்கிட்டு வந்திருக்கீங்க?" என்றாள் அந்தக் கிழவி சிறிது மனச் சங்கடம் கொண்டவள் போல.

"எங்கிருந்து அழைச்சுக்கிட்டு வருவோம். எல்லாம் மருதூர்ப் பாதையிலேதானே வந்து சிக்கும்! அனுதை என்றான். நல்ல உருவம். நான் கல்யாணம் செய்துக்கலாம்னுதான் அழைச்சுக்கிட்டு வந்தேன்" என்றான்.

இதைக் கேட்டதும் மற்றவனுக்குக் கோபம் வந்து விட்டது. "ஏய், ஜாக்கிரதையாகப் பேசு; நீ மாத்திரம்தான் அழைச்சுக்கிட்டு வந்தாயா? நானும் தான் அழைச்சுக்கிட்டு வந்தேன். எனக்கும்தான் அவளைக் கல்யாணம் செய்துக்கணும்னு எண்ணம்" என்றான்.

கிழவி மெதுவாகச் சிரித்தாள். "திரௌபதி மாதிரி அழகான பெண்ணுகத்தான் அழைச்சுக்கிட்டு வந்திருக்கீங்க. ஆனால் உங்களுக்குள்ளேதான் ஒற்றுமை இல்லையே..? இப்பத்தான் என்ன குடி முழுகிப் போவுது? இந்தப் பெண்ணை என்கிட்டம் ஒப்படைங்க. எனக்குத் தெரியும், யாருக்கு இவளைக் கல்யாணம் செய்து கொடுக்கணும்னு" என்றாள் கிழவி.

"சரியம்மா! நீ சொல்கிற படியே இந்தப் பெண் உன் பாதுகாப்பிலேயே இருக்கட்டும். நீ பார்த்து நியாயமா ஒரு ஏற்பாடு செய்கிற வரையிலே இவனே நானே இந்தப் பெண்ணுக்கிட்டே நெருங்கிப் பேசக் கூடாது. எந்த விஷமமும் செய்யக் கூடாது" என்றான் ஒருவன். மற்றவனும் அதற்குஇணங்கினான். இது அஞ்சுகத்துக்கு ஒரு பெரிய தர்ம சங்கடத்திலிருந்து அதிர்ஷ்டவசமாகத் தப்பி விட்டது போல் இருந்தது.

"சரி! நீங்க இந்தப்பெண்ணை அழைத்துக் கொண்டு வந்துவிட்டீங்க. இன்னிக்கு வெளியே கிளம்பினதற்கு இது தான் லாபம்போலிருக்கு. சரி! வெளியே போய்ப் படுங்க—இவள் இங்கேயே படுத்துக் கிடட்டும்.." என்றாள் கிழவி.

மருதை தன் தாயாரிடம் ஏதோ சொல்ல நினைப்பவன் போல் தயங்கி நின்றான். மருதையின் தயக்கத்தைக் கண்டு கதிரன் அவனை வெட்டி விடுவது போல் பார்த்தான். "என்ன இன்னும் தயங்கிறீங்க. போங்க வெளியே—" என்றாள் கடுமையான குரலில் மீனாட்சி. அஞ்சுகத்திற்கு இதெல்லாம் அச்சத்திடையேயும் வேடிக்கையாய் இருந்தது.

அவர்கள் இருவரும் வெளியே சென்று படுத்துக் கொண்டனர்.

குறத்தி மீனாட்சிக்கு இரண்டு பிள்ளைகள். ஒருவன் பெயர் கதிரன். இன்னொருவன் பெயர் மருதை. கதிரனும், மருதையும் அவளுக்கு ஒரே சமயத்தில் பிறந்த இரட்டையர்கள். மீனாட்சி அவ்விருவரையும் மிகவும் அன்பாகத்தான் வளர்த்து வந்தாள். கதிரனும், மருதையும் சண்டை போட்டுக் கொள்வதுமுண்டு, ஒற்றுமையாக இருப்பதுமுண்டு. அவர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரிக்க முடியாதவர்கள். அவர்கள் பரம்பரையாகவே குற்றவாளிகள் இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய தொழில் திருட்டுத்தான். அவர்களுடைய தகப்பனும் அந்தத் தொழிலைத்தான் செய்து வந்தான். திருடுவது மாத்திரமல்ல; கொலை செய்வதிலும் துளிக்கூடத் தயக்கம் காட்டாத

வர்கள். கதிரனுக்கும், மருதைக்கும் இதுவரையில் கல்யாணம் ஆகாத காரணம், இருவருக்கும் ஒரே சமயத்தில் ஒரே விதமான பெண்கள் அகப்படாததுதான். அப்படி ஏதேனும் ஒரு பெண் அகப்பட்டால் அவளை யார் கல்யாணம் செய்து கொள்வது என்ற போட்டிதான் ஏற்படும். இருவர் பேரிலும் அன்புடைய மீனாச்சி அவர்களுக்குள் ஏற்பட்ட சண்டையைச் சமாதானப்படுத்தி அந்தப் பெண்ணை அனுப்பி விடுவாள். இப்படியாகக் காலம் கடந்ததே தவிர, அவர்களுக்குக் கல்யாணமே ஆகவில்லை. இப்பொழுது அஞ்சுகம் வந்து அவர்களிடம் சிக்கிக்கொண்டு விட்டாள். இந்தப் பெண்ணின் காரணமாகத் தன் பிள்ளைகள் விரோதப் பட்டுச் சண்டை போட்டுக் கொள்ளக் கூடாது என்பதற்காகவே தன் பிள்ளைகள் அஞ்சுகத்தோடு அதிகம் நெருங்கிப் பழகாமல் இருக்க வேண்டிய திட்டத்தை ஏற்படுத்தினாள். அது அஞ்சுகத்துக்குச் சிறிது சாதகமாகவேதான் இருந்தது. அந்தக் கிழவியிடம் அன்போடு நடந்து அவள் அபிமானத்தைப் பெற்று விட்டால் தான் பயமில்லாமல் சிறிது நாள் வாழலாம் என்ற தைரியம் அவளுக்கு ஏற்பட்டது. அதற்குள் தன்மீது காதல் வைத்துள்ள சொக்கன் அவள் குற்றவாளியல்ல வென்பதை உலகம் உணரும்படி செய்து விடுவான் என்று நம்பினாள்.

குறத்தி மீனாச்சிக்கு அஞ்சுகத்தைக் கண்டதுமே அவள் மீது ஒரு எல்லையற்ற அன்பு சுரந்தது. தனக்கு இப்படிப் பட்ட அழகான பெண் மருமகளாக வருவதில் அவளுக்கு விருப்பம்தான். ஆனால் தன்னுடைய இரு புதல்வர்களில் யாருக்கு அவளை மனைவியாக்கலாம் என்பதுதான் அவளுக்குப் புரியவில்லை. எப்படியும் கொஞ்சநாள் பொறுத்தால் ஏதேனும் வழி பிறக்கும் என்று அவள் நினைத்தாள். அஞ்சுகத்தைப் போல் இன்னும் ஒரு அழகான பெண்ணும் கிடைக்கலாமல்லவா? தன்னை ஒரு அனாதையாகச் சொல்லிக் கொள்ளும் அஞ்சுகத்தின் வாழ்க்கை வரலாறுகளைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் அவளுக்கு ஏற்பட்டது. மெதுவாக அனுதாபத்தோடும், அன்போடும் அஞ்சுகத்திடம் அவளது வாழ்க்கை விவரங்களை விசாரித்தாள். அஞ்சுகமும் மீனாச்சியைப் பூரணமாக நம்பினாள். அவள் திருடர்கள் கூட்டத்திடையே பழகியவள்தானே? அந்தக் குறத்தியும் அந்தத் தொழிலையுடையவள்தானே? அவளிடம் உள்ளத்தை உள்ளபடி சொல்ல அவள் பயப்படவில்லை. தன் பிறப்பு, வளர்ப்பு, சிறைவாசம், விடு



''இளநீரின் அருமையை அறியாத குரங்கு அதைக் கீழே கொட்டுவது போல், ராமாயணத்தின் அருமை பெருமைகளைப் புரிந்து கொள்ளாதவர்கள் அதை எரிக்க முற்படுகிறார்கள்.'' —வினோபாஜி

தலை, அதற்குப் பின் மேகராஜபுரம் பார்வதியம்மாள் வீட்டில் வேலைக்கு அமர்ந்தது, பார்வதியம்மாள் அவனிடம் சந்தேகத்தோடு நடந்து கொண்டது. நிர்மலா அவனிடம் அன்பும் அனுதாபமும் கொண்டவள் போல் நடந்து கொண்டது, அங்கு விலையுயர்ந்த நகைகள் களவுபோனது, தன்மீது பழி ஏற்பட்டது. அப்பொழுது போலீஸார் தன்னைத் தேடுவது, சொக்கன் தன்மீது ஏற்பட்டுள்ள திருட்டுப் பழியை நீக்குவதற்காக முயற்சி செய்து கொண்டிருப்பது — எல்லாவற்றையும் அவள் சொல்லி விட்டாள். அஞ்சுகத்தின் சிக்கல் நிறைந்த வாழ்க்கைச் சரித்திரத்தைக் கேட்டதும் அவள்மீது முன்னிலும் மிகுந்த அனுதாபமும், இரக்கமும் ஏற்பட்டது மீனாட்சிக்கு.

அவள் அன்பு நிறைந்த குரலில் "சரிதான்! பாவம்! அப்படியென்றால் நீ அந்த நகைகளையெல்லாம் திருடவில்லையா? நீ மாத்திரமல்ல, எத்தனையோ நிரபராதிகளெல்லாம் இந்தப் போலீஸாரின் இலக்குக்குப் பலியாகி இருக்கிறார்கள். நீ பயப்படாதே. உனக்கு இந்த இடத்தில் எவ்வித ஆபத்தும் ஏற்படாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். போகட்டும், நீ எப்படிக் குற்றவாளியல்ல என்று உலகத்துக்கு நிரூபித்துக் காட்டப் போகிறாய்?" என்று கேட்டாள்.

"எப்படியோ ஏதோ முயற்சி செய்ய வேண்டியதுதான். கடவுள் அருள் இருந்தால் ஒரு நாள் எல்லாம் விளங்காமலா போய்விடப் போகிறது?" என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டாள் அஞ்சுகம். பிறகு "நீங்கள் எனக்குச் செய்யும் உபகாரத்தை நான் என்றும் மறக்க மாட்டேன்" என்றாள் நன்றி நிறைந்த குரலில்.

"நீ சொல்லியதிலிருந்து அந்தப் பார்வதியம்மாள் வீட்டிலிருக்கும் அந்த நிர்மலாதான் இந்தத் திருட்டைச் செய்திருக்கிறாள் என்று எனக்கு விளங்கி விட்டது. நீ கவலைப்படாதே. இந்த மலைக் குறவர்கள் எவ்வளவு சாமர்த்தியமாகத் திருடுவார்களோ அவ்வளவு சாமர்த்தியமாக உண்மையான திருடர்களையும் சந்தியில் கொண்டு வந்து நிறுத்துவார்கள். இதை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ கவலைப்படாதே" என்றாள் மீனாட்சி. **(தொடரும்)**

அட்டைப்பட விளக்கம்

## "ஆழி மழைக்கண்ணா!"

**பா**ரத நாட்டிலே மக்கள் இயற்கையைத் துய்த்தாற்போல் வேறு எந்த நாட்டிலும் எந்த மக்களுமே துய்த்திருக்க மாட்டார்களோ என்று எண்ண வேண்டியிருக்கிறது!

காற்று, வான், நீர், மண், மேகம், புஷ்பம், வண்டு, மலை - இப்படி இயற்கைப் பொருள்களையெல்லாம் இறைவன் திரு உருவங்களாகக் கொண்டு வேத கால முதல் பாரதி காலம் வரை அனுபவித்து வந்திருக்கிறார்கள்.

இந்தப் பண்பாட்டில் தோய்ந்தவர்களே அட்டைச் சித்திரத்தில் காணும் பெண்களும்.

'வானம் இருண்டு மேகம் திரண்டு விட்டது!' என்றவுடன் அவர்களுக்கு உற்சாகம் பொங்கி விட்டது. இறைவனின் பேரருள் என்னென்போம் என்று வியக்கிறார்கள். இறைவனின் திருக்கோயிலின் முன்பு ஆடிப்பாடி மகிழ்கிறார்கள்—குடையைத் தேடிக் கொண்டு மழைக்கு ஒதுங்கவில்லை!

அம்முறையிலே தமிழ் நாட்டின் பெண்களும் மழை மேகத்துக்கு வாழ்த்துக் கூறியிருக்கிறார்கள். ஆண்டாள் திருப்பாவையில் கண்ணபிரானை வேண்டிக் கொள்ளும் பாடல் தான் கனுதேசாயின் இச் சித்திரத்தைக் கண்டவுடன் நினைவுக்கு வருகிறது!

அதையே நமது நேயர்களுக்கு நினைவுப்படுத்த விரும்புகிறோம்.

**ஆழி மழைக் கண்ணா ஒன்றுநீ கைகரவேல்**
**ஆழியுள் புக்கு முகர்ந்து கொடு ஆர்த்து ஏறி**
**ஊழிமுதல்வன் உருவம் போல் மெய்கறுத்துப்**
**பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில்**
**ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்று அதிர்ந்து,**
**தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழை போல்**
**வாழஉலகினில் பெய்திடாய், நாங்களும்**
**மார்கழிநீர் ஆட மகிழ்ந்து – ஏலோர் எம்பாவாய்!**

ஓவியர் கனுதேசாயின் சித்திரமும் ஆண்டாளின் திருப்பாவைப் பாடலும் ஒன்றுக்கொன்று துணை நின்று உள்ளத்தைப் பரவசப் படுத்துகின்றன.

# உங்கள் பணத்தைக் கொடுக்கும்பொழுது சிறந்த சாமானையே நீங்கள் வேண்டுகிறீர்கள்

பட்டுப் புடவைகளாயினும் சரி அல்லது
பருத்திச் சட்டைத் துணிகளாயினும் சரி,
அவைகளை வாங்கும்பொழுது உங்கள் பணத்திற்குச்
சிறந்த பெறுமானம் அளிப்பவைதாம் என
நிச்சயப்படுத்திக் கொள்ள நீங்கள் விரும்புவது சகஜமே.

**சிறந்த துணிகளை வாங்க,**

## பின்னியின் துணிகளை வாங்குங்கள்!

தி பக்கிங்ஹாம் அண்ட் கர்நாடிக்
கம்பெனி லிமிடெட்
தி பங்களூர் உல்லன், காட்டன் அண்ட்
ஸில்க் மில்ஸ் கோ., லிட்.
நிர்வாகிகள்: பின்னி அண்ட் கோ.
(மதராஸ்) லிட்., மதராஸ்



BY. 1777

★★★ [தமிழ்ப் பெரியார் திரு வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களைத் தமிழகம் மறக்க முடியாது. தேசபக்தி, தியாகம், தொழிலாளர் ஒற்றுமை, தெய்வ பக்தி, சீலம் இவற்றிற்கு உறைவிடமாக விளங்கியவர் திரு. வி. க. அவர் நினைவு நாள் வரும் 17-9-56 அன்று வருகிறது. தமிழ் கூறும் நல்லுலகம் எங்கும் அவர் திருநாளைக் கொண்டாடித் தமிழ் வளர்த்த அந்தப் பெரியாருக்கு அஞ்சலி செலுத்துவோமாக. ஆசிரியர்]

# தமிழ்த் தந்தை திரு.வி.க

பேராசிரியர் கல்கி

இன்று தமிழ் நாட்டில் உள்ள அறிவாளிகள் எல்லாரும் தமிழ் மொழியைக் குறித்துப் பெருமை கொள்கிறார்கள். தமிழின் சிறப்பை அறிந்திருக்கிறார்கள். தமிழை மேலும் வளப்படுத்தப் பாடுபடுகிறார்கள். தமிழ்ச்சங்கங்கள், தமிழ்ப் பத்திரிகைகள் பல தமிழ் வளர்க்கும் துறையில் ஈடுபட்டிருக்கின்றன.

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் தமிழ்நாட்டின் நிலை வேறுவிதமாக இருந்தது. ''தமிழ் ஒன்றுக்கும் உதவாத மொழி'' என்ற எண்ணம் பரவியிருந்தது. அரசியல் பிரச்னைகளைப் பற்றித் தமிழில் எழுதவும் பேசவும் முடியாது என்று கருதினார்கள். அறிவாளிகளும் படித்தவர்களும், ''தமிழில் எனக்குப் பேச வராது'' என்று சொல்லிக் கொள்வதில் பெருமை கொண்டார்கள்.

அத்தகைய சூழ்நிலையில் திரு. வி. கலியாணசுந்தரனார் ''தேசபக்தன்'' என்னும் தினப் பத்திரிகையின் ஆசிரியரானார். அப்பத்திரிகையின்மூலம் தமிழ் மொழியின் வன்மை இத்தகையது என்பதைத் தமிழர்கள் கண்டு கொண்டார்கள். திரு. வி. க. வின் தலையங்கங்கள் ஆயிரமாயிரம் தமிழ் இளைஞர்களின் உள்ளங்களில் தேசபக்திக் கனலை மூட்டின. அத்துடன் தமிழ் ஆர்வமும் பொங்கிப் பெருகச் செய்தன. தூய தமிழில் சொல்ல முடியாத பொருள் ஒன்றுமில்லையென்பது பலருக்கும் தெளிவாயிற்று. பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்து திரு. வி. க. பற்பல அழகிய சொற்களைக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து தற்கால அரசியல் விவாதங்களில் உபயோகப் படுத்தினார். 'அடடா! தமிழ் இத்துணை வளமுள்ள மொழியா?' என்று அனைவரும் வியந்தார்கள்.

கவிதை மூலமாகப் பாரதியார் தமிழுக்கும் தமிழ் நாட்டுக்கும் செய்த அரும்பணியைத் திரு. வி. க. தமிழ் வசன நடை மூலமாகச் செய்தார். எழுத்தினாலும் பேச்சினாலும் அத்திருப்பணியை அவர் ஆற்றினார். இனிய எளிய செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டும் அதிக நீளமில்லாத சிறிய வாக்கியங்களை அமைத்தும் திரு. வி க. நிகழ்த்திய சொற்பொழிவுகள் மெத்தப் படித்த அறிவாளிகளையும் ஏட்டுக் கல்விகளையே பயிலாத தொழிலாளிகளையும் ஒரே சமயத்தில் கவர்ந்தன.

பெஸண்ட் அம்மையாரின் 'ஹோம் ரூல்' இயக்கம் நடத்திய காலத்தில் வீராவேசங் கொண்ட தேசபக்தராகப் பொதுப் பணியில் ஈடுபட்ட திரு. வி.க. வைச் சில ஆண்டுகளுக்கெல்லாம் காந்தியடிகள் ஆட்கொண்டு விட்டார். வீராவேசக் கல்யாணசுந்தரர் சாது கல்யாண சுந்தரராக மாறி விட்டார். காந்தியடிகளின் அஹிம்சா தர்மமும் அன்பு மதமும் அவருடைய உள்ளத்தில் குடிகொண்டன; அவருடைய எழுத்திலும் பேச்சிலும் ஒளிர்ந்தன. ''மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்'' என்ற நூல் எழுதிய பின்னர் அவருடைய வாழ்க்கை காந்திய நெறியிலிருந்து பிறழாமல் சென்று கொண்டிருந்தது.

பாரத நாட்டுக்கும் பாரத சமுதாயத்துக்கும் உரிய சிறப்புக்களில் தனிப் பெரும் சிறப்பு,

''எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் —அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

என்னும் வள்ளுவர் வாக்கில் அடங்கியுள்ளது. அந்தத் தனிப் பெரும் சிறப்

பேராசிரியர் கல்கியும் திரு. வி. க. வும்



பைத் திரு. வி.க. வின் வாழ்க்கையிலும் எழுத்திலும் காணலாம். சைவம், வைஷ்ணவம், பௌத்தம், சமணம், கிறிஸ்தவம், இஸ்லாம் ஆகிய எல்லாச் சமயங்களிலும் உள்ள அடிப்படையான உண்மைகளைச் சமன் வயப்படுத்தும் சமரச சன்மார்க்க நெறியைத் திரு வி. க. இடைவிடாமல் எடுத்துக் கூறிவந்தார். தாம் எழுதியுள்ள ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்களிலும் அந்நெறியை விளக்கியிருக்கிறார்.

அதுபோலவே சமூகத் துறையில் காந்தீயத்தையும் மார்க்ஸீயத்தையும் இயைவிப்பதற்குத் திரு. வி. க. முயன்று வந்தார். காந்தீயத்தின் அடிப்படையான அஹிம்சையும் சத்தியமும் திரு வி.க.வைக் கவர்ந்தன. மார்க்ஸீயத்தின் இலட்சியமான பொதுஉடைமைக் கொள்கையும் திரு. வி. க.வைக் கவர்ந்தது. எனவே, அன்பு நெறியைக் கடைப்பிடித்துப் பொது உடைமைச் சமுதாயத்தை அமைக்கும் வகையைப் பற்றி இடைவிடாது சிந்தித்தும் பேசியும் எழுதியும் வந்தார்.

திரு. வி. க. கடைப்பிடித்தும் எழுதியும் பேசியும் வந்த அன்பு நெறியானது அவரை அன்பு மயமாக்கியது. அவருக்குப் பகைவர் என்பவர் யாருமில்லாமல் செய்தது. அவருடன் பழகியவர்கள் அனைவரும் அவருடைய நண்பர்கள் ஆனார்கள்; கடைசிவரையில் நண்பர்களாகவே இருந்து வந்தார்கள்.

# பேச்சளவில் நல்லெண்ணம்!

ரஜனி

இலங்கை ஜனநாயக காங்கிரஸின் காரியக் கமிட்டி சென்ற வாரம் நடத்திய விசேஷப் பொதுக் கூட்டத்தில் ஒரு முக்கியமான தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. சென்னை முதன் மந்திரி ஸ்ரீ காமராஜ், ராஜாஜி, இலங்கைப் பிரதமர் ஸ்ரீ பண்டார நாயகா ஆகியவர்களுடன் பிரஜாவுரிமைப் பிரச்னையைப் பற்றி ஸ்ரீ தொண்டமான் சமீபத்தில் சம்பாஷணைகள் நடத்தினார். இந்தச் சம்பாஷணை விவரங்களை ஸ்ரீ தொண்டமான் காரியக் கமிட்டிக்கு எடுத்துச் சொல்லிய பிறகு பிரஜாவுரிமைப் பிரச்னையைத் தீர்ப்பதில் புதிய அரசாங்கம் நல்லெண்ணம் காட்டுவதைக் கமிட்டி வரவேற்றது. அதே சமயம் பேச்சளவில் நல்லெண்ணம் காட்டினால் மட்டும் போதாதென்றும் கிரியாம்சையில் இந்த நல்லெண்ணம் பிரதிபலிக்க வேண்டுமென்றும் கமிட்டி தனது தீர்மானத்தில் குறிப்பிட்டது.

பிரஜாவுரிமைச் சட்டம் நீதி நியாயமின்றி அமுல் நடத்தப்படுவதைக் கமிட்டி எடுத்துக் காட்டி, தர்ம நியாயத்துக்குக் கட்டுப்பட்டு இச்சட்டத்தை அமுல் நடத்த வேண்டுமென்றும் நியாயமற்ற முறையில் ஏற்கனவே நிராகரிக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான பிரஜாவுரிமை மனுக்களைப் புனர் விசாரணைக்கு எடுத்து நியாயம் வழங்க வேண்டுமென்றும் கமிட்டி மேலும் வற்புறுத்தியது. பிரஜா பதிவு இலாகா அதிகாரிகள் கல்வியறிவில்லாத தொழிலாளிகளிடம் தாறுமாறான கேள்விகளைக் கேட்டுத் திணற அடித்து மனுக்களை நிராகரிக்கும் அநீதியைக் கமிட்டி அங்கத்தினர்கள் காரசாரமாக எடுத்துப் பேசினார்கள்.

* * *

சென்னை ஹைகோர்ட் நீதிபதியும் பிரபல எழுத்தாளருமாகிய ஸ்ரீ ஏ. எஸ். பஞ்சாபகேச அய்யர் இலங்கையைச் சுற்றிப் பார்ப்பதற்காக இங்கு வந்திருக்கிறார். தமிழ் சிறுகதை எழுத்தாளர்கள் பெருகி வருவதைப் பாராட்டி அவர்கள் வளமிக்க தமிழில் எழுதும் பண்பு மேலும் வளர வேண்டுமென்றும் கூறிவிட்டு ராஜாஜியின் சிறுகதைகள் உளப் பண்பாடுகளைப் பிரதிபலிக்கும் அருமையான உதாரணங்கள் என்று ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்.

இலங்கையின் பாஷைப் பிரச்னையைப் பற்றி ஸ்ரீ அய்யர் மறைமுகமாகக் குறிப்பிட்டு, சிங்களத்தை அரியாசனத்தில் அமர்த்தவேண்டுமென்ற ஆர்வத்தினால் ஆங்கிலத்தை அறவே ஒழித்துவிட முயலுவது அறிவீனமென்றும், ஒரு மனிதன் சாதாரணமாக நாலு பாஷைகளைக் கற்றிருப்பது சுலபமான காரியம்தானென்றும் கூறினார். ஸ்ரீ ஏ. எஸ். பி. அய்யர் இலங்கையில் சுமார் ஒருமாத காலம் தங்கிச் சில சொற்பொழிவுகளையும் நிகழ்த்துவாரென்று தெரிய வருகிறது.

இலங்கையின் ஜனத்தொகை சென்ற ஒரு வருடத்தில் எண்பத்துமூன்று லட்சத்திலிருந்து எண்பத்தைந்து லட்சமாக அதிகரித்திருக்கிறது. புள்ளி விவர இலாகா அதிபர் வெளியிட்டிருக்கும் ஒரு அறிக்கையின் பிரகாரம் சிங்களவர்களின் மொத்த ஜனத்தொகை அறுபது லட்சம். இலங்கைத் தமிழர் 9,63,000, இந்தியர்கள் 9,43,000. சென்ற ஒரு ஆண்டில் இந்தியர் ஜனத்தொகையும் சற்றே அதிகரித்திருக்கிறது.

திரிகோண மலையிலுள்ள பிரிட்டிஷ் கடற்படைத் தளத்தைப் பிரிட்டன் காலி செய்ய வேண்டுமென்று இலங்கை கோரியிருப்பதையொட்டி அங்கு வேலை செய்து வரும் 175 பேர்களுக்கு இப்பொழுது வேலை நீக்க நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. மொத்தம் நாலாயிரம் இலங்கையர்கள் இந்தக் கடற்படைத் தளத்தில் வேலை செய்கிறார்கள். இவர்கள் வேலையை இழக்க நேரிட்டால் வேறு வேலைகள் கொடுக்க வேண்டுமென அரசாங்கத்தினிடம் வற்புறுத்தப்பட்டு வருகிறது. மாற்று வேலை கொடுக்கும் மூலமாகத் திரிகோணமலையில் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை யொன்றை ஏற்படுத்தச் சர்க்கார் திட்டமிட்டிருக்கிறார்கள்.

# ஹிமாலயா புக்கே

அளிக்கும் மிகுந்த புதுமைப் பொலிவை – நீங்கள்

நாள் முழுதும் உணரலாம்!

Himalaya Bouquet

# ஹிமாலயா புக்கே

டாய்லெட், டால்கம் பவுடர்கள்

Himalaya Bouquet

TALCUM POWDER

HBP. 14-20

# ஸ்ரீ தியாக பிரம்ம கான சபா

(ரிஜிஸ்டர்டு)

"வாணி மஹால்", தியாகராயநகர்

○●○

**திருவையார் ஸ்ரீ தியாகப் பிரம்ம ஆராதனை உற்சவ உதவிக்காக மகத்தான சங்கீத விழா**

○●○

**விசேஷ நிகழ்ச்சி நிரல் (D. V.)**

கச்சேரிகள் தினசரி மாலை 6 மணிக்கு ஆரம்பம்

*16 - 9 - 56 ஞாயிறு*
அரியக்குடி, பாப்பா, மணி

*22 - 9 - 56 சனி*
மகாராஜபுரம், லால்குடி, பழனி

*23 - 9 - 56 ஞாயிறு*
எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி

*29 - 9 - 56 சனி*
செம்மங்குடி, பாப்பா, பழனி

*30 - 9 - 56 ஞாயிறு*
ஆலத்தூர், சௌடையா, மணி

*2 - 10 - 56 செவ்வாய்*
எம்பார் விஜயராகவாச்சாரியார்
"தியாகராஜ சரித்திரம்"

*3 - 10 - 56 புதன்*
முசிரி, திருவாலங்காடு, டி. கே. மூர்த்தி

*7 - 10 - 56 ஞாயிறு*
டி. கே. பட்டம்மாள் & பார்ட்டி

*12 - 10 - 56 வெள்ளி*
சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை & பார்ட்டி

*13 - 10 - 56 சனி*
சுவாமிநாத பிள்ளை - புல்லாங்குழல்

*14 - 10 - 56 ஞாயிறு*
ஜி. என். பி. கிருஷ்ணன், ரகு

*17 - 10 - 56 புதன்*
மதுரை மணி அய்யர் & பார்ட்டி

*20 - 10 - 56 சனி*
த்வாரம் வெங்கடசாமி நாயுடு - பிடில்

*21 - 10 - 56 ஞாயிறு*
பாலசரஸ்வதி - பரதநாட்டியம்

○●○

பூரா நிகழ்ச்சிகளுக்கும் :

மெம்பர்கள் : ரூ. 25, 20, 15, 10, 7/8
மெம்பரல்லாதவர்கள் : ரூ. 50, 35, 22/8, 15, 10

ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் அணா 0-8-0
அல்லது எல்லா நிகழ்ச்சிகளுக்கும் ரூ 4/-
செலுத்தினால் இடம் ரிசர்வ் செய்யப்படும்

தினசரி டிக்கெட்டுகள் : ரூ. 7/8, 5, 3, 2, 1

# மூன்றெழுத்து வளர்த்த மோட்டார் தொழில்










2

சென்னை நகரத்தில் தினந்தோறும் ஏறக்குறைய ஒரு லட்சம் பேர் பஸ்களில் பிரயாணம் செய்கிறார்கள் என்று கணக்கெடுத்திருக்கிறார்கள். இதிலிருந்து மோட்டார் தொழில், அதாவது பஸ் ஓட்டுவது எவ்வளவு முக்கியமான பொதுஜன ஊழியம் என்பது தெரிய வரும். ஒரு லட்சம் பேர் எப்படியாவது கையில் இருக்கும் பணத்தைச்செலவழிக்க வேண்டும் என்பதற்காகவா பிரயாணம் செய்கிறார்கள்? இல்லை. ஜனங்கள் கையில் உள்ள பணத்தைச் சர்க்கார் கடன் பத்திரங்களிலோ, சேவிங்ஸ் பாங்கிகளிலோ போடாமல் பஸ்ஸில் பிரயாணம் செய்வதின் காரணம் என்ன? சென்னை நகரிலும், இதர பெரிய நகரங்களிலும் இருப்பவர்கள் பஸ்ஸில் பிரயாணம் செய்தே தீரவேண்டியிருக்கிறது. உத்தியோகம் பார்ப்பவர்களும், பலவித வியாபாரங்களில் ஈடுபட்டு வருபவர்களும், மாணவர்களும், தொழிலாளர்களும், ' இன்னும் ஆயிரக்கணக்கானவர்களும் ஒவ்வொரு நாளும் பஸ்களில் பிரயாணம் செய்தே ஆகவேண்டியவர்களாயிருக்கிறார்கள்.

ஆனால், நமது சென்னை சர்க்கார் நடத்தும் பஸ் தொழிலைப் பற்றியோ, சொல்ல வேண்டியதில்லை. மழைக் காலத்தில் சர்க்கார் நிர்வாக பஸ்ஸுக்குள் உட்கார முடியாது. வெய்யில் காலத்திலோ ஒரே புழுதியாக இருக்கும். இது மட்டுமா? குறிப்பிட்ட நேரத்தில் பஸ் கிடைக்காது. அப்படியே கிடைத்தாலும் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேரும் என்று உறுதி கூற முடியாது. இந்தத் தொல்லைகளுக்கும் மத்தியில் பொது மக்கள் பஸ்ஸில் ஏறிப் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கிறது. இவ்வளவு முக்கியமான இந்தக் கால சமூக வாழ்க்கைக்கு ஜீவாதாரமான, பஸ் ஓட்டும் தொழிலைப் பொது ஜனங்கள் மீது அக்கறை கொண்ட சென்னை சர்க்காரைவிடத் தனிப்பட்டவர்கள் சிலர் மிக நன்றாக நடத்தி வருகிறார்கள். அதில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர்கள் டி. வி. எஸ். மோட்டார் தொழில் ஸ்தாபனத்தார்.

பல காரியங்களுக்கு நாம் இப்போது மேல் நாட்டாரின் உதாரணத்தைப் பார்க்கச் சொல்வது வழக்கம். ஆனால் மோட்டார் தொழில் நடத்துவதற்கு நாம் 'அமெரிக்காவைப் பார்; ஸ்விட்ஸர்லாந்தைப் பார்' என்று சொல்ல வேண்டியதில்லை. இதோ தமிழ் நாட்டில் மதுரையிலுள்ள டி.வி.எஸ். ஸைப் பார்க்கச் சொன்னாலே போதும்! டி. வி. எஸ். ஸ்தாபனத்தின் தலைமைக் காரியாலயத்தின் படத்தை இந்தக் கட்டுரையின் ஆரம்பத்தில் பாருங்கள். இது நாலு மாடிகள் உள்ள கட்டடம். பூமிக்குள் மோட்டார் சில்லறைச் சாமான்கள் வைக்கும் பெரிய கிடங்கும் இருக்கிறது. ஒவ்வொரு மாடியிலும் வசதியான கூடங்கள், அறைகள், சுமார் ஐந்நூற்று அறுபது டன் இரும்பும் ஆயிரத்து எண்ணூறு டன் ஸிமெண்டும் கொண்டு கட்டப்பட்ட கம்பீரமான கட்டடம். சமசீதோஷ்ணம் செய்து கொள்ளும் குளிர் சாதனங்கள் பொருத்தப் பட்ட விசேஷ அறைகளும் இந்தக் கட்டடத்தில் இருக்கின்றன. பொது மக்களுக்குப் பஸ் ஓட்டும் தொழிலைக் கொண்டு உருவானது







பகீரதன்









இந்தக் கட்டடம். இந்தக் கட்டடத்துக்குள் சென்று அதன் அருமை பெருமைகளைப் பார்ப்பதற்கு முன்னால், பஸ் தொழிலைப் பற்றிய விவரத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்வோம். இந்த உலகத்தில் முதன் முதலில் எப்பொழுது மோட்டார் ஓட்ட ஆரம்பித்தார்கள்? யார், எங்கே ஆரம்பித்தார்கள்?

நூற்று எண்பத்து ஏழு ஆண்டுகளுக்கு முன்னால் அதாவது ஆயிரத்து எழுநூற்று அறுபத்தொன்பதாம் ஆண்டு பாரிஸ் நகரத்தில் மிருகங்களின் உதவியில்லாமல் நீராவியின் சக்தியால் ஓடும் வண்டியைக் கண்டு பிடித்தனர். இதைக் கண்டு பிடித்தவர் காப்டன் நிக்கொலஸ் ஜோஸப். இந்த வண்டி யுத்த தளவாடச் சாமான்களை ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்கு எடுத்துச் செல்வதற்காக உபயோகப்பட்டு வந்தது. இது மணிக்கு மூன்று மைல் வேகத்தில் தான் சென்று கொண்டிருந்தது. ஆனாலும் அந்தக் காலத்தில் இது ஒரு மாபெரும் சாதனையாகப் போற்றிப் பாராட்டப் பட்டது.

முப்பத்திரண்டு ஆண்டுகளுக்குப் பின்னால் ஆயிரத்து எண்ணூற்று ஒன்றாம் ஆண்டில் ரிச்சர்ட் டிரிவிதிக் என்னும் பிரிட்டிஷ் நிபுணர் இந்த வண்டியில் இன்னும் கொஞ்சம் சீர்


ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்துக்குச் சாமான்களை எடுத்துச் செல்லும் மோட்டார் வாகனங்கள்

திருத்தம் செய்து இதில் பொது மக்களும் ஏறிச் சவாரி செய்யும்படி மாற்றினார்.

ஆயிரத்து எண்ணூற்று முப்பதாம் ஆண்டில் ஆங்கிலேயர்கள் இந்த வண்டியில் பெரிய மாறுதலைச் செய்தார்கள். மணிக்குப் பத்து மைல் வேகம் போகும்படியாகவும், பதினைந்து பேர் அமர்ந்து சவாரி செய்வதற்கு வசதியாகவும் மாற்றி அமைத்தனர். இதற்குப் பிறகு நீராவி பஸ்கள் இங்கிலாந்து நகர வீதிகளில் ஓடுவது சர்வ சாதாரணமாக இருந்து வந்தது

எந்த நல்ல காரியத்துக்கும் எதிர்ப்பு இருப்பது போல இதற்கும் பலத்த எதிர்ப்பு ஏற்பட்டது. இந்த மோட்டார் வண்டிகளால் பொது மக்கள் அபாயத்துக்கு உள்ளாகிறார்கள், இதைத் தடுக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்தனர். அதற்காக ஆயிரத்து எண்ணூற்று அறுபதாம் ஆண்டில் ஒவ்வொரு வண்டிக்கு முன்னாலும் சிவப்புக் கொடி கட்ட வேண்டும் என்று 'சிவப்புக் கொடிச் சட்டம்' உண்டாயிற்று. அந்தச் சட்டத்தை இன்றைய தினமும் நாம் நகரங்களில் காணலாம். நீளமான சாமான்களை ஏற்றிக் கொண்டு செல்லும் வண்டிகளில் முன்னாலும், பின்னாலும் சிவப்புக் கொடி கட்டியிருப்பார்கள். இரவு வேளைகளில் சிவப்பு விளக்குகள் ஏற்றி வைத்திருப்பார்கள்.

சில ஆண்டுகள் மோட்டார் வண்டியில் மாறுதலே ஏற்படவில்லை. பிறகு ஒரு நாள் ஜெர்மனியைச் சேர்ந்த டாக்டர் என்.ஏ. ஓட்டோ என்னும் நிபுணர் இப்போது இருக்கும் மோட்டார் இன்ஜினுக்கு அஸ்திவாரம் போட்டார். எண்ணெய் எரிவதனால் உண்டாகும் சக்தியைக் கொண்டு நிமிஷத்துக்கு 800 தடவை வேகமாகச் சுற்றி இயங்கும் மோட்டார் இயந்திரத்தைக் கண்டு பிடித்தார். காலப் போக்கில் அதில் இருந்த இன்னும் சில குறைபாடுகளைக் கண்டு, அதையும் நீக்கி 1899-ம் ஆண்டு பெட்ரோல் எண்ணெயில் ஓடும் மோட்டார் வண்டியைச் செய்து காண்பித்து விட்டார். அப்பொழுதெல்லாம் இன்ஜினை மோட்டார் வண்டிக்குக் கீழே வைத்துப் பொருத்தியிருந்தார்கள். அதனால் எத்தனை எத்தனையோ அசௌகரியங்கள் இருந்து வந்தன.

இதைப் போக்குவதற்குப் பலர் பலவிதங்களில் முயன்று வந்தனர். இதில் பிரஞ்சு தேசத்தில் தச்சு வேலை செய்து வந்த எமிலி லெவாஸர் என்னும் நிபுணர் வெற்றி பெற்றார். புதுமையான மோட்டார் வண்டியைக் கட்டினார். இன்ஜினை வண்டியின் முன்புறத்தில் வைத்து அதன் சக்தியை மிகச் சுலபமாகக் கையாளும்படி செய்தார். 'கிளச்' காலால் மிதித்து இன்ஜினுக்கு எண்ணெய் கொடுக்கக்கூடிய ஆக்ஸிலேட்டர் முதலியவைகளை டிரைவர் உட்காரும் இடத்திலேயே பொருத்தினார். இதற்குப் பிறகு தான் மோட்டார் வண்டி வளர ஆரம்பித்தது.

நவீன வசதிக்கு வித்திட்ட முதல் மோட்டார் வண்டி சார்லஸ் துர்யா என்பவரால் 1893-ம் ஆண்டில் செய்யப்பட்டது. இவர் ஒரு அமெரிக்கர். இவருக்குப் பின்னால் 1896-ம் ஆண்டில் ஹென்றி போர்டு மோட்டார் வண்டிகள் செய்து தெருவில் ஓட்ட ஆரம்பித்தார். ஐரோப்பாவில் மோட்டார் கார்கள் தயாராகிக் கொண்டிருந்தாலும் எல்லாரும் உபயோகப்படுத்தும் முறையில் முதன் முதலில் மோட்டார்கார்கள் செய்து விற்பனைக்கு ஏற்பாடு செய்து தந்தவர் ஹென்றி போர்டுதான். இவருடைய முயற்சியால் 1910-ம் வருடத்தில் இருந்து எல்லாக் கார்களுமே பெட்ரோல் எண்ணெயில் ஓடுவதற்கு ஆரம்பித்து விட்டன.

இந்த மோட்டார் தொழிலில் இரண்டு பெரும் பிரிவுகள் இருக்கின்றன. ஒன்று மோட்டார் பாகங்களைச் செய்து மோட்டார் காரைக் கட்டுவது. இரண்டாவது மோட்டார் கார்களை விற்பனை செய்வதும்; அவைகளைச் செப்பனிட்டுக் கொடுப்பதுமாகும்.

மேலே கூறிய இரண்டாவது பகுதியை இந்தியாவில் திறமையாகச் செய்துவரும் இந்திய ஸ்தாபனம் டி. வி. எஸ். ஒன்றுதான். மோட்டார் சில்லறைச் சாமான்கள் விற்பனையில் இந்தியாவில் டி. வி. எஸ். தான் முதன்மை ஸ்தானம் வகித்து வருகிறது. அதைப்போலவே மோட்டார் ரிப்பேர் செய்வதிலும் பிரசித்தம் அடைந்திருக்கிறது.

மோட்டார் சில்லறைச் சாமான்களையும், மோட்டார் கார்களையும் வாங்கி விற்கும் புகழ்பெற்ற டி. வி. எஸ். தலைமை ஸ்தாபனக் கட்டடத்துக்குள்தான் நாம் இப்பொழுது செல்லப் போகிறோம்.

டி. வி. எஸ். தலைமை ஸ்தாபனக் கட்டடத்துக்குள் சென்றதும், முதலில் ஒரு அறைக்குள் அழைத்துச் சென்றார்கள். "இவர்தான் சாமான்கள் விற்பனை மானேஜர் கண்ணன்" என்று அறிமுகப்படுத்தினார்கள்.

ஸ்ரீகண்ணன் சாவதானமாக என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார்.

"நான் மோட்டார் சாமான்கள் வாங்க வரவில்லை. எப்படி மோட்டார் சாமான்களைச் சேகரம் செய்து வைத்து விநியோகம் செய்து வருகிறீர்கள் என்று தெரிந்து கொள்வதற்காகவே வந்தேன்" என்று சொல்ல வேண்டும் என்று நினைத்தேன். அவ்வாறு நான் சொல்வதற்கே அவர் இடம் வைக்கவில்லை. என் முகத்தைப் பார்த்தவுடனேயே நான் ஒரு பத்திரிகைக்காரன் என்பதை எப்படியோ புரிந்துகொண்டு விட்டார். உடனே எனக்கு அந்தப் பெரிய கட்டடத்தின் எல்லா இடங்களையும் சுற்றிக் காட்ட ஆரம்பித்தார்.

உயர்ந்த தேக்குமரத்தில் அழகான வேலைப்பாடுகளுடன் கூடிய மரப் படிகளின்மீது அவர் முன்னால் செல்ல நான் பின்னால் சென்றேன். இருவரும் மேலே மேலே படிகள்மீது ஏறிச் சென்றோம். எனக்குக் கால் வலிக்க ஆரம்பித்து விட்டது. ஒரு இடத்தில் நின்று "இப்பொழுது எங்கே போகிறோம்?" என்றேன்.

"முதலில் மேல் மாடிக்குச் செல்வோம்" என்றார். மீண்டும் படி ஏறும் படலம் தொடர்ந்தது. படிகளுக்கு ஒரு முடிவே இல்லையோ! நேரே பரமபதத்துக்கே இந்தப் படிகள் கொண்டு சென்றுவிடுமோ! என்று யோசனை உண்டாகிவிட்டது. இந்தச் சமயத்தில் நல்ல வேளையாகப் படிகள் முடிவடைந்தன. அங்கிருந்த ஒரு கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தோம்.

அடுத்த கணம் எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. மதுரை மீனாட்சி அம்மன் கோவில் தங்கக் கலசம் வெகு சமீபத்தில் தெரிந்தது. வான வீதியில் நின்று மதுரைமா நகரைப் பார்ப்பது போல இருந்தது. "இதுதான்

மக்கள் பிரயாணத்துக்கு உபயோகப்படுத்தி வரும் மோட்டார் வாகனங்கள்



மதுரை நகரிலேயே உள்ள மிக உயரமான கட்டடம்" என்றார் ஸ்ரீ கண்ணன்.

"மிக உயர்வான தொழில் ஸ்தாபனமும் இதுதானே" என்றேன் நான்.

"வசதியாக ஏறி இறங்குவதற்கு 'லிப்ட்' இருக்கிறது" என்று கூறி லிப்டின் மூலம் கண் மூடிக் கண் திறப்பதற்குள் கீழே தரைக்கு வந்து மீண்டும் மேலே அழைத்துச் சென்றார். அந்தப் பொல்லாத மனிதர் கட்டடத்தின் படிக்கட்டுகள் மூலமும் நான் ஏறிப் பார்க்க வேண்டும் என்பதற்காகவே முதலில் என்னைப் படிகள் மூலம் அழைத்துச் சென்றார் என்று அப்போதுதான் தெரிந்தது.

நாலாவது மாடியில் ராஜாஜி அவர்கள் மதுரைக்கு வந்தபோது அவர் தங்குவதற்கென்று விசேஷமாக அமைக்கப் பட்ட அறைக்கு அழைத்துச் சென்றார். சமசீதோஷ்ணத்துக்கு வேண்டிய குளிர் சாதனங்களுடன் கூடிய அருமையான அறை. அதில் எல்லாவிதமான சௌகர்யங்களும் சுகாதார வசதிகளும் மிகச் சிறந்த முறையில் செய்து வைக்கப்பட்டிருந்தன. இவற்றைப் பார்த்தபோது டி. வி. எஸ். நிர்வாகிகளுக்கு ராஜாஜியின் மீது உள்ள பக்தியையும் மரியாதையையும் எண்ணி வியந்து போனேன். பிறகு ஒவ்வொரு மாடியிலும் உள்ள டி. வி. எஸ். நிர்வாகக் காரியாலயத்தையும், அதில் தொண்டாற்றும் நூற்றுக்கணக்கான சிப்பந்திகளையும் காண்பித்துக் கொண்டு வந்தார். ஐந்நூறு சதுர அடி பரப்புள்ள விசாலமான கூடங்களில் வரிசை வரிசையாக மேஜைகளும் நாற்காலிகளும் போட்டுச் சிப்பந்திகள் வேலை செய்து கொண்டிருந்தனர். சர்க்கார் காரியாலயங்களுக்குள் போய் அங்கு வேலை செய்யும் உத்தியோகஸ்தர்களின் அழகையும், அங்குள்ள சுற்றுச் சூழ்நிலையையும் பார்த்துவிட்டு இந்தக் காரியாலயத்தைப் பார்த்தபோது "அடாடா! நிர்வாகம் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்!" என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டேன்.

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டு உழைத்து வருகிறார்கள். அன்றாட வேலையை அன்றன்றைக்கே தீர்த்து விடுகிறார்கள். எட்டு மணி நேரத்துக்கு மேல் ஒரு நிமிஷம் கூட அதிகப்படியாக வேலை செய்வதில்லை. அவர்கள் வேலையில் களைப்பும் அலுப்பும் ஏற்படாமல் எப்போதும் சுறுசுறுப்பாக இருக்கும்படி கட்டடத்தை எப்போதும் சம சீதோஷ்ண நிலையில் வைத்திருக்கிறார்கள். இதை எல்லாம் பார்த்துவிட்டு மோட்டார் வண்டி சில்லறை உறுப்புகள் சேகரித்து வைத்திருக்கும் பாதாளக் கிடங்குக்குச் சென்றோம்.



**மோட்டார் உறுப்புகள் விற்பனைக்கு அடுக்கி வைத்திருக்கும் காட்சியையும், அந்த இலாகாவில் தொண்டாற்றும் சிப்பந்திகளையும் படத்தில் காணலாம். வலதுபுறத்தில் இருந்து இரண்டாவதாக நிற்பவர்தான் மானேஜர் ஸ்ரீ கண்ணன்.**

பாதாளக்கிடங்குக்குச் செல்வதற்கும் வசதியான 'லிப்ட்' இருக்கிறது. அதன் மூலம் தான் சாமான்களையும் எடுத்துக் கொண்டு செல்கிறார்கள். பாதாளத்துக்குள் அமைத்திருக்கும் அறைக்குள் சென்றபோது ஒரு கணம் ஒன்றும் புரியாமல் தவித்தேன். காரணம், பாதாளக் கிடங்குக்குள் இருந்தாலும் சென்னைக் கடற்கரையில் நிற்பது போலக் காற்று ஜிலு ஜிலு என்று வீசிக் கொண்டிருந்தது. அவ்வாறு காற்று வீசுவதற்கு வேண்டிய இயந்திர வசதிகள் செய்து வைக்கப்பட்டிருக்கின்றன.

பல ஆயிரக்கணக்கான மோட்டார் சாமான்கள்; பல லட்ச ரூபாய் மதிப்புள்ள மோட்டார் உறுப்புகள் குவிந்து கிடக்கின்றன. ஒவ்வொரு உறுப்புகளும் தனித்தனியாகப்பிரித்து வைக்கப்பட்டிருந்தது. ''இந்தச் சாமான்களுக் கெல்லாம் எவ்வாறு கணக்கு வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''எதைப் பற்றிக் கேட்டாலும் கணக்கு சொல்ல முடியும்''. என்றார்.

அங்கிருந்த ஒரு சிறு மோட்டார் உறுப்பை எடுத்துக் காண்பித்து, ''இதில் எவ்வளவு இருக்கிறது?'' என்றேன்.

அந்த மோட்டார் உறுப்பு இருந்த அறைக்குச் சென்றார். அங்கிருந்த கார்டைப் பார்த்தார். ''இது 1954ம் வருஷம் வரவழைக்கப் பட்டது. அப்பொழுது 40 உறுப்புகள் வரவழைத்தோம். இதுவரையில் 18 உறுப்புகள் தான் விற்கப்பட்டிருக்கின்றன'' என்று கூறிவிட்டு, ''இதேபோல் கீழே காரியாலயத்திலும் இதற்குக் கணக்கு இருக்கிறது'' என்று தொடர்ந்து சொன்னார்.

''இவ்வளவு பெரிய கட்டடத்தில் ஒவ்வொரு மாடியிலும் நூற்றுக் கணக்கான பேர்கள் வேலை செய்யும் இடத்தில் யாரிடமாவது ஏதாவது கேட்க வேண்டுமானால் ஒவ்வொருவரையும் கூப்பிட்டு விடுவதற்கும், அவர்கள் உங்களிடம் வந்து போவதற்குமே காலம் சரியாக இருக்கும் போலிருக்கிறதே'' என்றேன்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. யாரும் அவர்கள் இடத்தை விட்டு அசைய வேண்டாம். அவரவர்கள் மேஜையில் அமர்ந்தபடி பேசுவதற்கு வசதியாக 'டெலிபோன்' இருக்கிறது. இது இந்தக் கட்டடத்தில் உள்ளவர்கள் மட்டும் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்வதற்காகவே அமைக்கப் பட்டது'' என்று பதிலளித்தார்.

''உங்களிடம் எந்த மோட்டார் சாமான்கள் கேட்டாலும் கிடைக்குமோ?''

''எங்களை நம்பி இந்தக் கட்டடத்துக்குள் மோட்டார் சாமான்கள் வேண்டும் என்று அடிவைத்துவிட்டால் போதும். அது இந்த உலகில் எங்கிருந்தாலும் வரவழைத்துக் கொடுத்து விடுவோம். நீங்கள் இப்பொழுது பார்த்ததைப் போல இன்னும் ஐந்தாறு பங்கு பெரிதான கிடங்கு ஒன்று இன்னொரு இடத்தில் இருக்கிறது. அங்குதான் முதலில் டி. வி. எஸ். ஸ்தாபனமும் முதன்முதலில் ஆரம்பமாயிற்று. அங்கு போகலாமா?'' என்றார் கண்ணன்.

'அடாடா! தொழில் நடத்தினால் இப்படி அல்லவா நடத்த வேண்டும்?' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டே ''வேண்டாம் இதைப் பார்த்ததே போதும்!'' என்றேன்.

மோட்டார் விற்பனையில் டி. வி. எஸ். ஸ்தாபனம் இந்தியாவில் முதன்மை பெற்றிருப்பதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை என்பதை அங்கு நடக்கும் நிர்வாக ஒழுங்கையும், கட்டுப்பாட்டையும் பார்த்தவுடனேயே தெரிந்துகொள்ள முடிந்தது.

''ரொம்ப சந்தோஷம்!'' என்று கூறி ஸ்ரீ கண்ணனிடம் விடைபெற்றுக் கொள்ளும் போது, ''சார்! தங்களைத் தொழிற்சாலை மானேஜர் கூப்பிடுகிறார்!'' என்றார்.

''எங்கே?''

''டெலிபோனில்.''

டெலிபோனில் என்னைக் கூப்பிட்டவரிடம் பேசினேன். ''டி. வி. எஸ். தொழிற்சாலையைப் பார்க்க வேண்டாமா? டி. வி. எஸ். பஸ்களையும் அதன் தொழிலாளர்களையும் தெரிந்து கொள்ள வேண்டாமா?'' என்றார்.

''கட்டாயம் தெரிந்து கொள்ளத்தான் வேண்டும்.'' என்றேன்.

''இதோ என்னுடைய கார் தங்களை அழைக்க வருகிறது. அதில் வந்துவிடுங்கள்'' என்றார். நேயர்களே! கார் வரப்போகிறது. தயாராக இருங்கள். டி. வி. எஸ். பஸ் தொழிற்சாலைகளுக்குள் சென்று அதன் வேலை முறைகளைப் பார்ப்போம். டி. வி. எஸ். தொழிலாளர்களைப் பற்றியும், அவர்கள் திறமையாகப் பஸ் ஓட்டும் அதிசயத்தைப் பற்றியும் தெரிந்து கொள்வோம். (தொடரும்)

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்



நீங்கள் 'விஸ்டம்' டூத் ப்ரஷால் தேய்க்கும்போது அது ஈறுகளுக்கு வலுவளித்து ஆரோக்கிய மளிக்கிறது. இது முக்கியம். ஏனெனில் மென்மையான ஈறுகளில் தொத்து வியாதி ஏற்படலாம்......,

நமது உடல் சருமத்தைப் போலவே ஈறுகளின் சருமத்திலும் கிருமிகள் சேரும் சருமம் மென்மையாக இருந்தால் கலபத்தில் கிழிந்து கிருமிகள் சேர இடமளிக்கும்.



கிருமிகள் சேர்ந்ததும் ஈறுகள் இளகலாகி வீங்கும்; சாப்பிடும் போதும், பல் துலக்கும் போதும் இரத்தம் கசியும்,



இதை 'ஜிஞ்ஜிவிடிஸ்' வியாதி என்பார்கள். இதை அலட்சியம் செய்தால் பற்கள் எல்லாம் கொட்டிவிடும். உங்களுக்கு 'ஜிஞ்ஜிவிடிஸ்' இருப்பதாகத் தோன்றினால் பல் வைத்தியரை உடனே பாருங்கள்!



உங்கள் பற்களை ஆரோக்கியமாக வையுங்கள். இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள்! துலக்க சுலபமாயிருக்கவே அதன் வடிவம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப்பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறைப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் டூத் ப்ரஷை உபயோகியுங்கள்! காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்!




நீடித்து உழைக்கும் டூத் ப்ரஷ்





சென்னப்பட்டணத்தில் ஒரு நாஸ்திகனும் ஒரு பக்தனும் பக்கத்து வீட்டுக்காரர்கள். இருவருக்கும் சிநேகம் வரவர அதிகரித்தது. நாஸ்திகன் நல்ல குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். பேசுவது நாஸ்திகமாயினும் நடவடிக்கைகளில் யோக்கியன். தினமும் பேசிப் பேசி வாதிப்பார்கள். முடிவில் இருவரும் உட்கார்ந்து காப்பி பலகாரம் சாப்பிட்டுக் கலைவார்கள்.

நாஸ்திகன் கடவுள் 'இல்லை' 'இல்லை' யென்று தினமும் கடவுளைத் தியானித்து வந்தான். பக்தன் 'உண்டு' என்று நிரூபிப்பதற்காக எதிர்க்கட்சியில் சொல்லப்படும் பூர்வபட்சத்தை எடுத்துச் சொல்லி, எடுத்துச் சொல்லித் தன்னுடைய பக்தியை அரைப் பங்கு இழந்து விட்டான். திடீர் என்று இருவருக்கும் டைபாயிடு ஜுரம் வந்து இருவரும் இறந்து விட்டார்கள்.

யமன் நாஸ்திகனை வரவேற்றான். "பிள்ளாய்! நீ உன்னையும் அறியாமல் நல்ல கதி அடைந்து விட்டாய். உனக்காகக் காத்திருக்கிறார்கள், பார் அங்கே!" என்று விஷ்ணுவின் கிங்கரர்களைக் காட்டி, "செல் அங்கே!" என்றான்.

"வேண்டாம்! கடவுள் இல்லை!" என்றான் நாஸ்திகன் அங்கேயும்.

ஹரியின் கிங்கிரர்கள் கேட்கவில்லை. அவனைப் பலாத்காரமாக இழுத்துக்







கொண்டு போய் விட்டார்கள். அவனும் அழுது கொண்டே விஷ்ணு லோகத்துக்குச் சென்றான்!

* * *

“அப்பனே!” என்று யமன் பக்தனைப் பார்த்து அனுதாபத்தோடு பேச ஆரம்பித்தான்.

பக்தன் மறுபடியும் வாதாட ஆரம்பித்தான். “உன் வாதங்களால் இப்போது பயனில்லை. நீ உன் வாழ்நாளை வாதப் பிரதிவாதங்களில் வீண் செலவு செய்து விட்டாய். மறுபடியும் திரும்பிப் போ. கொஞ்சகாலம் சீரங்கம் கோயிலில் ஒரு மூஞ்சூறு எலியாக இருந்து, அவ்விடத்தில் போடப்படும் எச்சில், அழுக்கு இவைகளைத் தின்று பயத்தோடு வாழ்க்கை நடத்தி விட்டுப் பிறகு வா!” என்று யமன் பக்தனைத் தட்டிக் கொடுத்து அனுப்பி விட்டான்.

“தாயே! பெருந்தேவி! இப்படி என்னைச் செய்யலாமா?” என்று பக்தன் அழுதுகொண்டே சீரங்கம் வந்து சேர்ந்தான். “சேர்ந்தது” என்று சொல்ல வேண்டும். ஏனென்றால பக்தன் இப்போது எலியாகப் போய் விட்டான்.

அந்த எலி தாயார் சந்நிதியிலேயே தன் வாழ்க்கை நடத்திற்று. எலிகளுக்கு ஆயுள் மிகக் குறைவு. மனிதனுக்குத்தான நூறு வருஷங்கள். எலிகள் வெகு சீக்கிரம் கிழம் தட்டிப் போய் இறந்து விடும். தவிர, கிழ வயதுக்கு முன்னமேயே பூனையோ, பெரிய எலியோ பிடித்துத் தின்று விடும். நம்முடைய பக்தர் ஆறு மாதங்களுக்குள் அம்மன் திருவடி யடைந்து விட்டார்.

“வா! கண்ணே! உனக்காகத்தான் காத்திருந்தேன்” என்று தேவி எலியை அழைத்தெடுத்து அணைத்துக் கொண்டு சென்றாள்.






# when you *must* look your loveliest

When it's glamour you want and you must look your loveliest . . . or when you need the assurance of all-day complexion perfection, Pan-Cake Make-Up by Max Factor Hollywood is your answer.

Used by Hollywood's most beautiful stars—both on and off the screen—Pan-Cake Make-Up gives you a flawless, naturally youthful-looking complexion that everyone will admire . . . and envy. And it will last far longer, too, without constant touch-up.

Enriched with Lanolin, it can't dry, won't harm your skin. It is the perfect "cover-up" for uneven skin tones, embarrassing shadows and minor skin imperfections.

Ask for Max Factor's Pan-Cake Make-Up, today, at your favorite cosmetics stores . . . and be sure you will always look your loveliest.

**PAN-CAKE***

*MAKE-UP by*

**MAX FACTOR**

HOLLYWOOD



*instantly . . . a light natural-looking complexion.*

SOLE AGENTS IN INDIA: ORIENT COSMETICS PRIVATE LTD., MADRAS, BOMBAY, CALCUTTA

# பன்னிரண்டு ஆண்டுகளில் பல்கேரியா

ஒருவர் தம் கையில் செருப்பைப் பிடித்தவாறு தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்தார்.

செருப்பு அறுந்து போகவில்லை; நல்ல நிலையில்தான் இருந்தது. புதிதாக வாங்கப்பட்ட செருப்பும் அல்ல. உபயோகிக்கப்பட்ட செருப்புதான். பின் இதைக் கையில் ஏந்திச் செல்வானேன் என்று வியந்து கொண்டிருந்த போதே இன்னொருவர் அதே மாதிரி வந்தார். இப்படிப் பலர் தெருவில் இப்படியும் அப்படியும் போய்க் கொண்டிருந்தார்கள். இதைப் பார்த்த அந்த வேற்று நாட்டு நண்பர், ஒருவரை அழைத்து, 'ஏன் இப்படி பூட்ஸைக் கையில் எடுத்துக் கொண்டு போகிறீர்கள், காலில் போட்டுக் கொள்ளாமல்?'' என்று கேட்டார்.

''பூட்ஸ் தேய்ந்து விட்டால் என்ன செய்வது? திரும்பி வாங்கப் பணம் வேண்டாமா?'' என்று கேட்டார்.

பல்கேரியா மக்களைப் பற்றி இப்படியொரு கதை சென்ற யுத்தத்துக்கு முன் வழங்கி வந்தது. ஆம், பல்கேரிய மக்களின் வறுமை நிலையை எடுத்துக் காட்டுவதற்காக எழுந்த கதைதான் இது.

அப்படிப்பட்ட தேசம் பூரண சுதந்திரம் பெற்று இன்றைக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் அந்த தேசம் அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பார்க்கும் போது ஆச்சரியமாக இருக்கும். மேலே குறிப்பிட்ட நிலையிலிருந்த தேசமா இப்படி மாறி விட்டது என்று வியக்கத் தோன்றும்!

ஐரோப்பாவில் துருக்கி தேசத்துக்கு வடக்கேயும் ஹங்கேரி தேசத்துக்குத் தெற்கேயும் கருங்கடலின் மேற்குப் பகுதியிலும் ஒரு சின்னஞ் சிறு தேச மிருக்கிறது. அதுதான் பல்கேரியா.

பல்கேரியா சுமார் ஐந்நூறு ஆண்டுகள் துருக்கியின் ஆதிக்கத்திலும் சுமார் இருபதாண்டுகள் நாஜி ஜெர்மனியின் ஆதிக்கத்திலும் அடிமைப்பட்டு, மேலே குறிப்பிட்ட முறையில் பரம ஏழைமை நிலையில் நலிவுற்று வந்தது. அப்படிப்பட்ட நாடு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் 1944-ம் ஆண்டில் செப்டம்பர் மாதம் 9-ம் தேதி பூரண சுதந்திர நாடாகியது!

சுதந்திர மடைவதற்கு முன் பல்கேரியா முக்கியமாக விவசாய நாடாக இருந்தது. ஆனால் இன்று ஒரு தொழில் வளம் பெருகிய சிறந்த நாடாகி விட்டது!

சோவியத் ருஷ்யாவுடன் சார்புள்ள அரசாங்கமாதலால், சோவியத் ருஷ்யாவின் தொழில் துறையில் அநுபவப்பட்ட நிபுணர்களின் உதவி கொண்டு, இரும்பு, மாங்கனீஸ், ஈயம் முதலிய கனிப் பொருள்கள் வெட்டியெடுக்கும் தொழில்கள் பெருகி யிருக்கின்றன. புதுப்புது தொழில்களுக்குத் திட்டமிட்டுத் தேசமெங்கும் சுமார் எழுநூறு தொழிற்சாலைகள் தோன்றியுள்ளன.

1939-ல் பல்கேரியாவில் தொழில் துறையில் என்ன உற்பத்தியாயிற்றோ, அதைவிட இரண்டரை மடங்கு அதிகமாகத் தொழில் துறையில் சென்ற ஆண்டு உற்பத்தி பெருகி யிருக்கிறது. மொத்தத்தில் சென்ற மகா யுத்தத்துக்கு முன்பு பல்கேரியா பாரத நாட்டைப் போல விவசாயத்தை நம்பி வாழும் தேசம் என்றுதான் பெயர் பெற்றிருந்தது. இப்பொழுது அதே தேசம் சென்ற பன்னிரண்டு ஆண்டுகளில் தொழில் துறையில் முன்னணியில்

பல்கேரிய கூட்டுறவுப் பண்ணையைச் சேர்ந்த கலைக் கழகத்தார் நடத்தும் நாடகத்தில் ஒரு காட்சி.





கருங்கடல் பிரதேசத்தில் உள்ள ஸ்டாலின் நகரத்தில் தொழிலாளர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுவதற்காக ஓய்வு விடுதிகள் நிர்மாணிக்கப்பட்டு வருகின்றன.

நிறைகும் தேசம் என்று பெயர் எடுத்து, சுபிட்ச நாடாகி விட்டது.

பல்கேரியாவில் ருஷ்ய நிபுணர்களின் உதவியால் விவசாயத்துறையில் கூட்டுப் பண்ணை முறை ஏற்பட்டிருக்கிறது. இன்று அங்கு சிதறிக் கிடக்கும் நிலங்களே இல்லை. உழத்தக்க நிலங்களை எல்லாம் கூட்டுப் பண்ணைகளாக இணைத்து ஆயிரக்கணக்கான டிராக்டர்கள்செலுத்திப் பண்படுத்திப் பயிர் செய்து வருகிறார்கள். இப்படிப் பல்கேரியா தேசம் முழுவதிலும் 3056 கூட்டுப் பண்ணைகள் இருக்கின்றன!

இவ்வளவெல்லாம் முன்னேற்ற மடைந்த மக்கள் சுபிட்சமாகவும் சந்தோஷமாகவும் இருப்பார்கள் என்பதில் சந்தேகமென்ன? இதை அவர்கள் உணவுப் பொருள் பற்றிய புள்ளி விவரம் வெகு நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

1948ல் அவர்கள் எவ்வளவு அரிசியை உட்கொண்டார்களோ, அதை விட நான்கு மடங்கு அரிசி அதிகமாகச் சென்ற ஆண்டு சாப்பிட்டிருக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

பல்கேரியா சுதந்திரம் பெற்றதன் காரணமாக ஐ. நா. சபையிலும் ஓர் அங்கம் வகிக்கிறது. பல காலம் அடிமைப்பட்ட தேசமாதலால், உலக சமாதானம் நிலவ வேண்டும் என்பதில் பூரண ஆர்வம் கொண்டிருக்கிறது. பாரதப் பிரதமர் நேருவின் பஞ்சசீலக் கொள்கைகளில் தனது நம்பிக்கையைத் தெரிவித்திருக்கிறது.

பாரத நாட்டுக்கும் பல்கேரியாவுக்கும் விவசாயத் துறையில் மட்டும் ஒற்றுமை என்பதில்லை. கலைத் துறையிலும் அவர்கள் நம்மைப் போல் தான் இருக்கிறார்கள். நமது கவிஞர் ரவீந்திரநாத் டாகுர் 1928-ல் பல்கேரியாவுக்கு விஜயம் செய்தார். ரவீந்திரரின் பல நூல்கள் பல்கேரிய மொழியில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. ''கீதாஞ்சலி'' மட்டும் இதுவரை நான்கு பதிப்புகள் அந்நாட்டில் வெளி வந்துள்ளன.

நம் நாட்டுத் திரைப் படங்களான ''ஆவாரா,'' ''தோபிகா ஜமீன்'' என்ற படங்களைப் பல்கேரியா மக்கள் ஆர்வத்தோடு பார்த்து மகிழ்ந்தனர்.

சமீபத்தில் நமது பாரதத்தின் உப ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் பல்கேரியாவுக்குச் சென்றிருந்த போது, ''உலக சமாதானம், ஜனநாயக ஆட்சி முறை, பொது வுடைமை ஆகியவை சம்பந்தமாக நம் இரு தேச மக்களும் ஒரேவிதமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறோம். அதனால் ஒத்த உணர்ச்சி கொண்ட நண்பர்களிடையே எப்படி நட்பு நாளுக்கு நாள் அன்யோன்னியமாகி வளருமோ, அதே மாதிரி நம் இரு நாடுகளின் நட்பும் நெருக்கமாக வளர்வதாக!'' என்றார். நாமும் நம் உப ஜனாதிபதியின் விருப்பத்தையே ஆமோதிக்கிறோம்.

பல்கேரிய மக்கள் தங்கள் சுதந்திர தினத்தைச் சென்ற வாரம் மிக உற்சாகமாகக் கொண்டாடினார்கள். அவர்கள் மகிழ்ச்சியில் நமக்கும் பங்குண்டல்லவா?

# நான் மிகவும் கண்டிப்பான பேர்வழியாக்கும்

எனக்கு, சிறந்த பொருள்கள்தான் ஒத்துக்கொள்ளும். ஆமாம், மட்டமான சரக்கை என்கிட்டே யாராவது தள்ளப்பார்த்தால் அந்தப் பாச்சா என்கிட்டே பலிக்காது. எங்கம்மா இருக்காளே, சாமர்த்தியக்காரி. அவள் எனக்கு கிளாக்ஸோவைதான் ஆகாரமாய்க் கொடுக்கிறாள். கிளாக்ஸோ பரிசுத்தமான புஷ்டி தரும் பால் ஆகாரம். அது மட்டுமா? அதில் எலும்பு வளர்ச்சிக்கு வேண்டிய விடமின்-டியும், ரத்தப் புஷ்டிக்கு அவசியமான இரும்பு சத்தும் சேர்ந்திருக்கின்றன. எனக்கு பகலெல்லாம் ஒரே கொண்டாட்டம். இரவில் அயர்ந்த தூக்கம். என் உடம்போ—பேபி ஸாண்டோ! என் அம்மாவுக்கு வேறு என்ன பரிசுவேண்டும்!

நான் சிபாரிசு
செய்வது க்ளாக்ஸோ

**Glaxo**

குழந்தைகளுக்கு
நிகரற்ற பால் உணவு




க்ளாக்ஸோ லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லி.
பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . புதுடெல்லி

## கல்கி ஆகஸ்ட் மாதச் சிறுகதைப்



இருபது வருஷங்களுக்கு முன்னால் பாஸ்கரன் வந்தான். அக்காவின் குடிசையை அடைக்கலம் தேடி வந்தான், அறியாப் பாலகன் போன்று. அவன் வயது பன்னிரண்டு. வருவாய் குறைவாக இருந்தது. நிறைந்த அன்பின் துணை கொண்டு, மலர்ந்த முகத்துடன் வரவேற்றாள் மீனாட்சி. கணவனின் சம்பளம் வெகு சொற்பம். குடும்பத்தின் பற்றாக் குறையைத் தவிர்க்கச் சிறுசிறு வேலைகள் செய்வது மீனாட்சியின் குடும்பத்துக்கு உதவி அளித்தது. வீட்டில் கொண்டு வந்து கொடுப்பவர்களுக்கு மாவு அரைத்துக் கொடுப்பது, அப்பளம் இட்டு விற்பது முதலிய சில்லறை வேலைகள் செய்து வந்தாள் மீனாட்சி.

வந்த மைத்துனன் தனக்குப் பாரம் என்று கணவன் நினைத்து விடக் கூடாது, பாஸ்கரன் அன்போடு வளர, தன் உழைப்பு அதிகம் தேவை என்று எண்ணிற்று உடன் பிறந்த பாசம். அந்தத் தற்காப்பு அவசியமே இல்லாதபடி, ஒரு சம்பவம் நடந்தது.

அருணாவுக்கு ஒரு வயது. மீனாட்சியின் கணவன், மூன்று நாட்கள் விஷ ஜுரத்தில் மண்ணாகி விட்டான். பால்ய வயதில் விதவையாகி விட்ட அவள் நெஞ்சிலே, தான் ஒரு அனாதை என்ற எண்ணத்தின் நிழல் படியாதவாறு, ஒளி விளக்காய் நின்றவர்கள் தம்பி பாஸ்கரனும், குழந்தை அருணாவும். பாலைவனமாகி விட்ட அவள் வாழ்வைச் சோலை வனமாக்கி விட்ட பசுங்கிளி அருணா, பக்கத்துணையான அன்பு ஊற்றுப் போன்ற தம்பி பாஸ்கரன், இவர்கள் மீது கொண்டுள்ள அன்பே, மீனாட்சியினுடைய வாழ்வின் பற்றுக் கோலாக இருந்தது.

# சாகாத

தன்னை எதிர்த்த வறுமையோடு போராடினாள். ஒரு நிமிஷமும் ஓய்வு ஒழிச்சலற்ற உழைப்பு. கல்யாணம், வளைகாப்பு, விருந்து எந்த விசேஷங்களிலும் மீனாட்சியம்மாளின் கை வண்ணம் தேவையாக இருந்தது. வறுமையை மறந்து வளத்தோடு வாழ்ந்தனர். பாஸ்கரன் படிப்பையும் ஓரளவு கவனித்துக் கொண்டாள். படிப்பு மேலே போகப் போக நிலைமை திண்டாடிற்று. எவ்வளவு

## போட்டியில் பரிசு பெற்ற கதை

# வாழ்வுக்கு சஞ்சீவி

**கோமதி சுப்பிரமணியம்**




தான் ஓடாக உழைத்தாலும் அவன் உழைப்பு பாஸ்கரனின் மேல் படிப்புக்குக் கைகொடுக்கத் தவறியது.

தன் நிலையை ஓரளவு உணரும் பருவம் வந்த போது, தனக்காகத் தன் சகோதரி படும் அவதியைக் கண்டான் பாஸ்கரன். தன்னால் எட்ட முடியாத படிப்பை அந்தரத்தில் விட்டுவிட்டு, கடைப் பையனாக அவன் வேலைக்கு அமர்ந்தான்.

ஒரு நாள் பட்டாளத்தில் சேரப் போவதாகக் கடிதம் எழுதியவன், மறைவாகப் போய் விட்டான். அந்தக் கடிதத்தைக் கண்டு அலறினாள் உடன் பிறந்தவள்.

மாதா மாதம் பாஸ்கரனிடமிருந்து பணம் வந்தது. அந்தப் பணத்தின் செழிப்பிலே அருணா செக்கச் சிவக்கச் செந்தாமரை போலத் தளதளவென வளர்ந்தாள். அருணாவின் வளர்ச்சியிலே மீனாட்சியின் கவலை சிறிது சிறிதாக மறைந்தது.

காலம் வளர்ந்தது.

அருணா வளர்ந்தாள். பாஸ்கரனின் உத்தியோக உயர்வுகளின் அடையாளமாக மாதா மாதம் வரும் பணத்தின் அளவும் உயர்ந்தது. தவறாது வந்த கடிதங்களில் அருணாவின் உடல் வளர்ச்சியோடு உள்ளத்து வளர்ச்சிக்கான யோசனைகள் வளர்ந்தன. பாடவும் படிக்கவும் வைக்கச் சொல்லி எழுதினான். இதைப் படித்த போது ஏனோ மீனாட்சியின் கண்களிலே கண்ணீர் பெருகியது.

அவன் எண்ணம் போலவே அருணா வளர்ச்சியிலும் அறிவிலும் வளர்பிறையானாள்.

அருணாவின் நிழற்படத்தைக் கடிதத்தில் குறிப்பிட்டு எழுதியதோடு ஒரு முறை தம்பியைத் தாய் நாடு வந்து போகும்படியும் அழைத்திருந்தாள். பல நாள் பிரிவும், அக்காவின் அன்பழைப்பும் பாஸ்கரனை மூன்று மாத லீவில் தாய் நாடு திரும்பத் தூண்டின.

பாஸ்கரன் தாய்நாடு திரும்பினான். வீட்டை விட்டு வெளியேறிய கடைப் பையன் பாஸ்கரன் வரவில்லை. ஐந்து வருஷங்களுக்கு முன் அவன் உலகம் தெரியாத சிறுவன். இப்பொழுதோ உலகம் சுற்றிய சிப்பாய். பொறுப்பு வாய்ந்த உத்தியோகஸ்தன். வயதுக்கேற்ற வளர்ச்சி. தொழிலுக்கேற்ற உடை. கம்பீர நடை. உருவத்திலே, உடற்கட்டிலே பற்பல இனிமை தொத்தளிக்கும் மாறுதல். கண்ணனின் விழிகளில், ஆனால் குரலில் அக்கா' என்ற அதே அன்பு பொங்கியது. 'தம்பி' என்றவள் மேலே பேசமுடியாதபடி அவன் வளர்ச்சியின் வனப்பிலே பெருமிதம் கொண்டு நின்றாள்.

"மாமா!" என்று அருணா ஓடி வந்து பாஸ்கரனின் காலைக் கட்டிக் கொண்டாள். பத்து வயதுச் சிறுமியின் கண்களில் அன்பு துள்ளுவதைக் கண்டான்.

"மாமா, எனக்கு நடனம் ரொம்பப் பிடிக்கும். ஆனால் அம்மா எனக்குச் சொல்லி வைக்க மாட்டேங்கறா. அதுக்குப் பணம் ரொம்ப வேணுமாம்."

பாஸ்கரன் இதைக் கேட்டதும் மிகவும் பூரித்துப் போனான்.

மூன்றாம் நாள் அந்த வீட்டுக்குள் சதங்கை ஒலி கேட்க ஆரம்பித்தது. நாட்டியத்துக்கான பட்டுடைகள் கடை வீதியிலிருந்து வந்தன. தம்பியே அத்தனை பொருள்களையும் சுமந்து வருவதைக் கண்டு வியப்பினால் விழித்து நின்றாள் மீனாட்சி.

மூன்று மாத லீவு முடிந்து ராணுவ வேலைக்குத் திரும்ப வேண்டிய நேரம் வந்தபோது பாஸ்கரனின் மனம் கசந்தது. தாய்நாட்டில் ஏதாவது சொற்பமான சம்பளத்தில் வேலை கிடைத்தாலும் தங்கி விடலாம் என்று எண்ணினான். ஆனால் அருணாவுக்காகத் தன் எண்ணத்தைக் கைவிட்டான். அருணா சந்தோஷமாக வளர வேண்டுமானால், தான்

உழைக்க வேண்டும்; ரத்தத்தைப் பிழிந்து உழைக்க வேண்டும். உழைப்பு பணமாக வேண்டும். அவன் தேவைக்கு வேண்டிய பணம் ராணுவத்தில் தான் பெற முடியும். தாய்நாட்டில் அல்ல. ஆகவே, கண்காணாத கண்டத்துக்குப் பயணமானான்.

காலம் ஓடிற்று. காலத்தின் சுழற்சியிலே அருணா சிறிது சிறிதாக மாறி வந்தாள். கள்ளங்கபடமற்ற குழந்தைப் பருவம் மாறி, யௌவனத்தின் படியிலே காலை ஊன்றினாள். அவள் கால் வைத்த வேகம், அவள் பாதையை வேறு திசையில் திருப்பி விட்டது.

அருணா உலகம் தெரியாத சிறுமியல்ல. நாட்டிய நங்கை அருணாதேவி. பாட்டிலே புகழ்; கலை அவளுக்கு வரப்பிரசாதம். பெருக்கும் புகழுக்கும் கேட்பானேன்? அவள் புகழ் அதிகம் தெரியாமல் இருந்த காலம்; பள்ளிக்கூட ஆண்டுவிழாக்களில் மட்டும், பாராட்டும், கை தட்டலும் கிடைத்து வந்த காலம். ஒருசமயம், மீனாட்சி படுத்த படுக்கையாக நோயுற்றாள். பாஸ்கரனின் பணம் வழக்கம்போல வந்தும், நோய் விழுங்கி விட்டது. தாயார் பிழைக்கப் பணம் தேவை. என்ன செய்வாள்? தவியாய்த் தவித்தாள்.

சந்தர்ப்பத்தைப் பயன் படுத்துவதில், தேர்ச்சி பெற்ற கலையன்பர் ஒருவர், அருணாவுக்கு யோசனை வகுத்துக் கொடுத்து விட்டார்.

அவள், சினிமாப் படத்துக்கு நடனமாட ஒப்புக் கொண்டாள்; ஆனால், அம்மாவின் சம்மதமின்றி அவள் ஆடினாள்; பணம் வந்தது; தாயார் பிழைத்தாள்.

உள்ளத்தில் பிறந்த உணர்ச்சி, விசுவரூபம் எடுத்து அதையே பிழைப்பாக எண்ண வைத்தது. அவள் தேவைக்கு அதிகமான புகழ், பணம் வந்தன. புகழ் ஏற ஏற அவள் தாயன்பு, பணிவு மறைந்தன.

இந்நிலையில் பட்டாளத்துச் சிப்பாய் பாஸ்கரன் தாய்நாடு வரப்போகிறான். அதுவும் அருணாவின் கழுத்திலே மூன்று முடிச்சுகள் போடுவதற்கு....!

தாயன்பின் மனவேதனையையோ, மாமன் பாஸ்கரனின் வரவையோ, எதையும் லட்சியம் செய்யாமல் அருணா தன் போக்கிலே போய்க் கொண்டிருந்தாள். நினைத்தபொழுது கார் சவாரி; நண்பர்களுடன் அரட்டை; ஸ்டுடியோ முகாம்; அவள் பொருளும் புகழும் பெற்ற பணக்காரி.

புதிய பங்களா போன்ற வீட்டுக்குள் பாஸ்கரன் உற்சாகமாக வந்தான். புதிய பங்களாவின் அமைப்புக்குள் மூழ்கிப் போனான். தன் உழைப்பினால் உயர்ந்த அருணாவைக் காண ஆவல் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தபோது மீனாட்சி மெல்லிய குரலில் வரவேற்றாள்.

பாஸ்கரன் ஐந்து ஆண்டுகளுக்கு முன் போன சிப்பாய் அல்ல; அவன் உடம்பிலே புதிய பதவிக்கு உரிய மதமதப்பு; பொலிவு; யுத்த சேவைக்குரிய சின்னங்கள். நடையிலே இன்னும் கம்பீரம்.



"அக்கா" என்ற அதே மாற்றமில்லாத அன்புக் குரல் வந்தது. யுக யுகாந்தரமாகக் காணாதவன் போன்று அன்போடு அழைத்தான். மாறாத அன்பின் உருவத்தைக் கண்டாள் மீனாட்சி. மாற்றமில்லாத நெஞ்சு அவளுக்கு இருந்தும், அவளது மனச்சாட்சிக்கு இல்லாத காரணத்தால் அடைக்கும் கண்ணீரையும் நன்றாக அடக்கிக் கொண்டு, "தம்பி வா, சௌக்கியந்தானே?" என்று கேட்டாள்.

"ஏன் அக்கா அழுகிறாய்? நான் எவ்வளவு சந்தோஷமாக வந்திருக்கிறேன். எங்கே அருணா இருக்கிறாள்?"

அவள் மறைக்க நினைத்ததை மறக்காமல் கேட்டு விட்டான். "முக்கிய விஷயமாகக் கடை வீதிக்குப் போயிருக்கிறாள். வந்து விடுவாள்."

"அருமை மாமாவுக்காக அவளே, பண்டங்கள், பட்சணங்கள் வாங்கப் போயிருக்கிறாளா? அவள் அன்பு தனி, அக்கா! அவள் எப்போது வருவாள்?" என்றான்.

"இல்லை. அவள் வெளியூர் போயிருந்ததால் ரயிலடிக்கு



# உங்கள் கூந்தலில் அமைந்திருக்கும் சுருள்களை எழிலோங்கச் செய்யுங்கள்

யாவரும், சுருண்டு வளைவுகளோடிருக்கும் கூந்தலைக் கண்டு போற்றுகின்றனர். ஏதாவதொரு கெட்டியான எண்ணெயை உபயோகித்து சிக்குப் பிடிக்கும் விதத்தில் கூந்தலை படிய வைக்கக் கூடாது. கூந்தலுக்கான டாம்கோ வாசனைத் தேங்காய் எண்ணெயை உபயோகித்து உங்கள் கூந்தலின் இயற்கையான வளைவுகளை நிலைக்கச் செய்யுங்கள். உயர்ந்த பாணியில் பரிசுத்தப்படுத்திய இந்த லேசான எண்ணெய், மல்லிகை, ரோஜா, லெவண்டர் ஆகிய மூன்று தேர்ந்தியான வாசனைகளில் கிடைக்கிறது.

*35 வருஷங்களாக இந்தியாவின் மிகவும் விரும்பப்பட்ட கூந்தல் தைலம்.*



வாரத்திற்கொருமுறை கூந்தலுக்கு டாம்கோவின் தேங்காய் எண்ணெய் ஷாம்பூவை உபயோகித்து ஸ்நானம் செய்யுங்கள். இதனால் உங்கள் கூந்தல் மிருதுவாயும் இயற்கையான சுருள்களுடனும் இருக்க உதவும்.




## டாம்கோ

### கூந்தலுக்காக வாசனைத் தேங்காய் எண்ணெயும் ஷாம்பூவும்

டாடா ஆயில் மில்ஸ்

நீங்கள் இதுவரை அருந்தாத

# மிகச்சிறந்த காப்பி...

... ஆயினும் மிகவும் சுலபமான விலையில்!









ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த நறுமணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது.

நீங்கள் காப்பி வாங்கும்பொழுது ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். இது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம், இதனுடைய நறுமணம் சிறிதும் குன்றாமல். காற்றுப் புகாத ½, 1, 3, 7, 14 & 20 ராத்தல் டின்களில் பாக் செய்யப்படுகின்றன. இன்றே ஒரு டின் வாங்குங்கள்.

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிட்.**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**




## Stanes

**ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள்**
**சுத்தமான காப்பி**

எல்லோரும் வாங்கக்கூடிய
நல்ல காப்பி

STC 4057

திருவனந்தபுரம் ஏஜண்டு :
ஸ்ரீ ஜி. ஆர். ஹரிஹரன், செங்கிட்டை, சாலை

மதுரைக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் :
எம். எஸ். புசூகிரி நாடார் சன்ஸ், ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ், கீழ மாசி வீதி

வர முடியவில்லை. அநேகமாக வந்து விடுவாள்'' என்றாள் மீனாட்சி.

''வெளியூருக்கா? உன் துணையின்றியா? எதற்காகப் போனாள்?''

''அதிருக்கட்டும் குளி. சாப்பிட்டுக் கொண்டு உன்னுடைய ராணுவ சேவைகள் பற்றிச் சொல், கேட்கிறேன்.''

அவன் சொல்லத்தான் விரும்பினான். அக்காவிடமல்ல; அருணாவிடம். சென்ற தடவை வந்தபோது, ''மாமா'' என்று தன் கழுத்தைக் கட்டிக் கொண்டு கொஞ்சிய காட்சி அவன் உள்ளத்துள்ளே எழுந்தது. இன்று அவள் அப்படி வந்து பேச முடியாத மனுஷி. ஆகவே, தள்ளி நின்று ''சௌக்கியமா?'' என்று கேட்பாள். இவ்வாறு வரப் போகும் துன்பம் அறியாமல் அவன் உள்ளம் கற்பனைக் கோட்டைகள் கட்டி ஏங்கி நின்றன.

வாசலில் கார் வந்து நின்றது. அலை அலையாகச் சிரிப்பு. கலகலவென்ற பேச்சு. அருணா யாரோடு பேசுகிறாள்?

அருணா வீட்டிற்குள் வந்தவள் ஒய்யாரமாக, ஜடப்பொருளைப் பார்ப்பதுபோலப் பாஸ்கரனைப்பார்த்துவிட்டு மாடியறைக்குப் போனாள்.

''அருணா, சௌக்கியமா?''

''என்னைப் பார்த்தாலே தெரிகிறதே. கேட்க வேண்டுமா?''

''கூட வந்தது யார் அருணா?''

பதில் சொல்லாமலே அருணா போய் விட்டாள். மீனாட்சி, ''அது அவள் நண்பர். அவரால்தான் இவள் சினிமாவில் சேர முடிந்தது'' என்றாள்.

பத்துநிமிஷங்களுக்குப்பின் அருணா வந்தவள் பேசினாள். அவள் பேச்செல்லாம், சினிமா உலகத்தையும், அந்த உலகத்தின் அதிசய மனிதர்களையும் பற்றியதாக இருந்தன. பாஸ்கரன் ஊமையைப்போல அதை அனுபவித்துக் கொண்டிருந்தான்.

சாப்பாடு முடிந்ததும் முடியாததுமாகக் கையைத் துடைத்துக் கொண்டு வெளியே புறப்பட்டு விட்டாள் அருணா.

''எங்கே அருணா வந்ததும் வராததுமாகப் புறப்படுகிறாய்?....'' தம்பி தவறாக நினைத்து விடக் கூடாதே?'' என்று பட்டும் படாதது மாய்க் கேட்டு வைத்தாள் மீனாட்சி.

''ஸ்டூடியோவில் நிறைய வேலை இருக்கிறது....'' என்று சொன்னவள் பதிலுக்குக் கூடக் காத்திராமல் வெளியே நின்ற காரில் ஏறிப் பறந்து விட்டாள்.

பாஸ்கரன் உண்மையை உணர்ந்து கொண்டு விட்டான். அருணா தன்னை விட்டுத் தொலைவில் வெகு தொலைவில், விலகுவதை அவன் உணர்ந்தான்.

இதைப்பற்றி அவளையே கேட்டுவிடலாமென்றாலோ, அவள் எப்பொழுதாவது வீட்டில் தங்கினால்தானே? தலை நீட்டுவது. உடனே ஷூட்டிங் என்று மறைந்து விடுகிறாள்.

அன்று மத்தியானம் சாப்பாட்டுக்குப் பிறகு அதிசயமாக அருணா வீட்டில் தங்கி விட்டாள். வழக்கமான பரபரப்பு இல்லாமல் நிதானமாய்ச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள் எல்லோரிடமும். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்த எண்ணிய பாஸ்கரன் மெதுவாக அருணாவின் அறைக்குச் சென்றான்.



மனைவி :— அதுசரி. நீங்கள் தூக்கத்திலே பேசுகிறபோது நீங்களே கேள்வி கேட்டு, நீங்களே பதில் சொல்லிக்கொள்கிறீர்களே ஏன்?

கணவன் :— மற்றவர்களிடம் கேட்டால் நல்ல புத்திசாலித்தனமான பதில் வர மாட்டேன் என்கிறது!

---

''அருணா, இன்று உனக்கு ஓய்வுதானே... நானும் வந்து ஒரு வாரத்திற்கு மேலாகிறது. சிறிது நேரமாவது நாமிருவரும் மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்ததே யில்லை. இன்று நிம்மதியாக எங்கேயாவது வெளியே போய்விட்டு வரலாமென நினைக்கிறேன்....''

''மாமா, உங்கள் நினைப்புக்குத் தலை அசைத்துக் கீழ்ப்படிய என்னை நீங்கள் டிரில் வாங்கும் சிப்பாயென எண்ணி விட்டீர்களா? இந்த அருணாவுக்கு ஒவ்வொரு நிமிஷமும் லக்ஷம் பொன் அளிக்கும் நேரம். பொன்னான பொழுதை வீண் விரயம் செய்து ஊர் சுற்றித் திரிய முடியாது.''

எதிரியின் துப்பாக்கியினின்று பாயும் குண்டைவிட வேகமாகத் தாக்கின, அவள் கூறிய மொழிகள். ஆயிரம் வீரர்களால் அசைக்க முடியாத பாறை போன்ற அவன் இதயத்தை அரை நொடியில் தகர்த்தெறிந்து விட்டாள் அருணா. அப்பொழுதும் தன் ஆத்திரத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அடக்கத்துடன் பதில் அளித்து விட்டு அவன் வெளியே வந்து விட்டான்.

''உனக்கு நேரமில்லையானால் வேண்டாம் அருணா....தொந்தரவுக்கு மன்னித்து விடு'' என்று கூறி விட்டு அவன் வெளியேறியபோது அருணாவின் வதனத்திலே ஏளனத்தின் புன்னகை நெளிந்தோடியது.

அதன் பின்பு பல தினங்கள் கடந்தன. இரண்டு மாத லீவில் பதினைந்து தினங்கள் கழிந்தன. பாக்கி லீவை ரத்து செய்து விட்டு ராணுவத்துக்குத் திரும்பி விடலாமா என்று



"அண்ணே, நான் இனிமேல் திருடப்போறதில்லென்னு தீர்மானம் செய்திருக்கேன்!"

"அகப்பட்டுக் கொண்டாயா! உன்னைத் தான் இத்தனை நாளாகத் தேடிக் கொண்டு இருந்தேன். வா, ஸ்டேஷனுக்கு!"

---

எண்ணினான் பாஸ்கரன். அருணாவின் மனத்தைத் திருத்தலாம், திருத்த முடியும் என்ற நம்பிக்கையில் மறு நாள் காலையில் பேச எண்ணினான் அவன். ஆனால்....

கடை வீதி சென்ற பாஸ்கரன் இடி முழக்கம் போல் வீட்டினுள் நுழைந்தான். வெகு நாட்களாக எதிர்பார்த்த இடியும் புயலும்தான்—என்றாலும் அனுபவிக்கும்போது அதிர்ச்சி ஏற்படத்தானே செய்யும்?

"அக்கா, நான் அருணாவின் கல்யாணத்தைப் பற்றிக் கேள்விப்பட்டது நிஜந்தானா?" என்று கேட்ட அவன் குரலிலே ஆயிரம் இடியோசைகள் ஒலியிட்டன.

"என்னுடைய கேள்விக்கு நீ முதலில் பதில் சொல்லு, தம்பி! அருணா உன் மருமகள் இல்லையா? அவள் நலத்தில் உனக்கு அக்கறை உண்டா இல்லையா?"

"அக்கா, சொல்வதைச் சீக்கிரமாகச் சொல்லேன். சுற்றி வளைத்து என்னை வதைக்காதே."

"அருணா உன்னை மணந்து கொண்டால் அவள் உயிர் துறப்பாள்."

"அப்படி அருணா சொன்னாளா....?"

"இல்லையப்பா....அவள் ஜாதகம் சொல்லியது. மேலத் தெரு ஜோசியர் சொன்னார்."

"அக்கா, இதையேன் முன்பே என்னிடம் சொல்லவில்லை....?"

"சொல்லி என்ன பயன்? ஆனாலும் யோசித்துப் பார். அவள் உன் மருமகள். அவள் சுகதுக்கம் உன்னைச் சாரும்."

"அக்கா, நீ அழாதே! என் உழைப்பை உதிரத்தை ஊட்டி வளர்த்த அருணா அற்ப ஆயுளில் வாழ்க்கையை இழக்கச் சம்மதிக்க மாட்டேன். அவள் இளம் பயிர். அவள் பூத்துக் குலுங்கவேண்டிய மல்லிகை மலர். அவள் நல்வாழ்வுக்கு நான் வழி காட்டுவேன். அக்கா! எதிரியின் குண்டு வீச்சுக்கு முன் போகிற இந்த உடல் இச் செய்தியைக் கேட்டு அவள் திருமணத்தைப் பார்க்கத் தெம்பற்றதாக இருக்கிறது. அதற்கு என்னை மன்னித்துவிடு. நான் போய் வருகிறேன். அக்கா! ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்லுவேன். என்றைக்கும் அவள் இனிய வாழ்க்கை வாழ வேண்டும். அவளுக்கு என் அன்பு என்றைக்கும் உண்டு" என்றான் பாஸ்கரன்.

மறுகணம் "தம்பீ!" என்று தமக்கை அலறினாள். அவள் குரலுக்குப் பதில் சொல்ல அங்கே பாஸ்கரன் இல்லை.

இரண்டு வாரங்கள் சென்றன. அருணாவுக்கும் கலாரசிகருக்கும் வெகு ஆடம்பரமாகத் திருமணம் நடைபெற்றது. தன் கலைக்கு ஆதரவு தந்தவன் தன் வாழ்க்கைக்கும் ஆதரவு தருவான் என்று எண்ணி அவள் இறுமாந்திருந்தாள். அவர்களுடைய படங்கள் பல பத்திரிகைகளில் வெளிவந்தன. பாராட்டுகள் ஆங்காங்கே நடைபெற்றன.

அருணா வானத்துத் தாரகையாக உலாவினாள். அவள் எண்ணம், மனம் எல்லாம் அவளுக்கு வாய்த்த மணாளனைப் பொறுத்திருந்தது. மீனாட்சியம்மாள் மனசில்கூட 'அருணா வெகு புத்திசாலி' என்ற எண்ணம் வர வர எழுந்தது. ஆனால், அந்த எண்ணம் அதிக காலம் வளர்வதற்குள், அந்தோ! அந்தக் கலையன்பன், இன்னொரு இளம் நடனராணியை முன்னுக்குக் கொண்டு வரும் கலையுள்ளம் கொண்டவன் ஆனான்.

அதன் விளைவு, அவன் அவளை ஒரு நொடியில் விலக்கி விட்டுச் சென்றான். பின்னர் அருணா 'அவன் இருக்குமிடங்கள் தேடிப் போய்க் காலில் விழுந்தால் என்ன, கண்ணீரால் அவன் பாதத்தைக் கை யொற்றிக் கும்பிட்டால் என்ன?' என்று எண்ணினாள். ஆனால் அதற்குள் அவன் போய்விட்டான்.

உயிரை விட்டுப் பிரிந்த உடலைப் போல அவள் ஏங்கினாள், தவித்தாள்.

நாட்கள் செல்லச் செல்ல, அடிமரத்தை வேர்ப் புழு துளைப்பது போலத் துளைத்துத் துளைத்து அவள் சாயும் நிலைக்கு வந்தாள்.

யோசனைக் குமைச்சல் அவளைப் படுக்கையில் தள்ளியது. அவள் சும்மா மனம் நொந்து படுத்திருப்பதாக எண்ணினார்கள். ஆனால் அவள் இதயத்துள் மட்டும் அன்று, உடம்பிலும் கவலை அரித்துண்ணத் தொடங்கிற்று.

அவளுக்கு வைத்தியம் செய்ய வந்த டாக்டர் அவள் டி. பி. நோயால் தாக்கப்பட்டவள் என்றார். அருணாவுக்குள்ள பணம் கரைய ஆரம்பித்தது. அவள் விரும்பா விட்டாலும், அவள் தாய், மகள் நோயோடு சாகச் சம்மதிக்க வில்லை. அவள் பாராத வைத்தியர் இல்லை. விழியாத இரவு இல்லை.

வசதியான பொருள்கள் வட்டிக் கடைக்குப் போய்க்கொண்டிருந்தன. பின்னர் வீடு மாறிற்று. அவள் வாங்கிய நடனப் பொருள்கள் உள்படப் போக ஆரம்பித்தன. நாளுக்கு நாள் புதிய நடன ராணியின் புகழ் ஏறுமுகமாகப் போய்க் கொண்டிருந்தது. ஆனால் அருணா ஊர் ஊராகச் சுற்றிப் பல ஆஸ்பத்திரிகள் மாற்றி ஆஸ்பத்திரிகள் போய்க்

செப்டம்பர்

14ல்

முதல்

தென்னாடெங்கும்

M.G.ராமச்சந்திரன்

P.பானுமதி....

P.கண்ணாம்பா.

T.S.பாலையா..

நடித்த

தேவர்

பிலிம்ஸ்...

# தாய்க்குப்பின் தாரம்



டைரக்ஷன்: திருமுகம் • ஸ்டுடியோ: வாஹினி

கொண்டிருந்தாள். மெலிந்து உருமாறி விட்டாள் அருணா.

மீனாட்சியின் ஆதி வாழ்க்கை எம்மாதிரி ஆரம்பித்ததோ, சிறிய வீட்டில் யந்திரமாக உழைக்க வேண்டியது வந்ததோ அங்கே வந்து நின்றாள். தன்னைப் பிரபல நடனமாதாக ஆஸ்பத்திரியில் உள்ளவர்கள் சுட்டிக் காட்டி அவள் நிலையைப் பற்றிச் சொல்வதை அருணா வின் பலவீனச் செவிகள் கேட்க மறுத்தன. ஆகவே, அவள் ஆஸ்பத்திரி என்ற வதந்தி மண்டபத்தைவிட வீட்டுக்குள்ளேயே இருப் பதற்கு விரும்பினாள்.

அவளுக்குக் கலை தந்த பரிசு தனிமை; ஏழைமை; ஒரு மாங்கல்யம்; ஓயாத இருமல். தனி வாழ்க்கையின் கசப்பு. தன் செய்கை யின் பாவத்துக்குப் பழியென்ற நினைப்பு. அருணா அணு அணுவாக நைந்து புண்ணாகிக் கொண் டிருந்த காலத்தும் விடாப்பிடியாக அவள் தன் கணவனுக்குக் கடிதம் எழுதத் தவறிய தில்லை. அருணாவின் கடைசிக் கடிதமும் அவள் கணவருக்குப் போய் விட்டது.

பதில் வராவிட்டால் தான் இறந்துபோய் விடப் போவது உத்தமம் என்றும், அவளை எடுத்து அடக்கம் செய்யும் ஒரு காரியம் செய் தால்தான் பிறந்ததின், மாங்கல்யம் பெற்ற தின் பலன் பூர்த்தியாகும் என்றும் கல்லும் உருகும்படி கெஞ்சி எழுதியிருந்தாள்.

அன்றுதான் கடைசி நாள் என்று சொல் லும்படியாக அருணா, நூல் போன்ற உரு விலே மெலிந்து இளைத்துப் படுக்கையில் படுத்துக் கிடந்தாள்.

''யாரம்மா, வாசற்பக்கம்? அவரா?'' என்ற ஆவலோடு கேட்டாள்.

''தபாற்காரன் வந்தான். கடிதம்வந்தது.''

''தபாலா? 'அவர்' எழுதியிருக்கிறாரா?'' என்று ஆவலோடு கேட்டாள். அவர் என்ற ஆவல் மீனாட்சிக்கு வேதனைதான் தந்தது. கடி தம் எழுதியிருந்தது அவள் தம்பி பாஸ்கரன்.

''ஏம்மா ஒரு வேளை அது மாமன் கடி தமோ?'' என்று கேட்டாள். தாய் தன்னிடம் பொய் சொல்லுவதை அவள் புரிந்து கொண் டாள். தாயின் மௌனம் அவளுக்கு உண்மை யைச் சொல்லி விட்டது.

கலங்கும் கண்ணீர் மெலிந்த கன்னங் களிலே ஓட ஓட அவள் படித்தாள்.

அருணாவுக்குப் பேச்சு வரவில்லை. தாயின் அன்பு முகத்தை நோக்கி, ''அம்மா! மாமன் வந்தால் என்னைப் பரிகாசம் செய்வாரே. அவர் வருமுன்னதாக நான் இறந்துவிட வேண்டும். அம்மா நீ எனக்கு ஏதேனும் வழி செய்'' என்று கெஞ்சினாள்.

''அருணா, என் தம்பி என்றைக்கும் நல்லவன்.''

''இல்லையம்மா. நீ இன்றைய உலகம் அறியாதவள். என்னை அவர் பார்த்துச் சிரிப்பார். அதுதான் நான் மடியப் போகும் விஷம்'' என்றாள் அருணா.

அருணாவுக்கு அன்று முதல் பிரக்ஞை தப்புவது வழக்கமாகிக் கொண்டு வந்தது.

பாஸ்கரன் வந்தான்.

முன்னைப்போல அருணாவின் வீடு எது? என்று கேட்டால் சொல்வாரைக் காணோம். மிகவும் குறுகலான தெருவுக்குள் வண்டி வர முடியாத முட்டுச் சந்தில் மிகவும் துர்நாற்றம் பிடித்த குடிசையின் அருகில் அவன் நடந்து வந்தான். அருணா அங்கே இருக்க வேண்டிய காரணம் புரியவில்லை. அவன் வந்த சமயம், மீனாட்சிக்கும், அருணாவுக்கும் எவ்விதமான வாக்குவாதமும் நடக்கவில்லை.

அருணா புலம்பிக் கொண்டிருந்தாள்!

''மாமா நீ வந்துவிடாதே. வந்து என் னுடைய இந்த கோர உருவத்தைப் பார்த் துக் காறித் துப்பாதே. நான் தாயன்னைக் கொன்றவள்- நான் கர்வி. உலகம் தெரி யாத அப்பாவி. நான் செய்ததற்குத் தண்டனை தந்தார் கடவுள். வஞ்சிக்கப் பட்டேன். ஐயோ! மாமா நீ இங்கே வந்தால் என்னைப் பார்த்துச் சிரிப்பாய். ....ஜன்னல் பக்கம் நிற்பது யார்? மாமனா?''

பாஸ்கரன் நெஞ்சம் துணுக்குற்றது. ஜன் னல் பக்கம் நின்றவன் விலகினான்.

அங்கிருந்து மெதுவாகப் பாஸ்கரன் நடந் தான். அவன் நடையில் அழுத்தம் இருந்தது. விரைவாகப் போய்க் கொண்டிருந்தான்.

அருணா ஒவ்வொரு விநாடியிலும் பாஸ்கரன் வந்து விடக் கூடாதே என்று கதறுவாள்.

அன்றைக்கு வந்த கடிதம் ஒன்று. அதன் பின்னர் கடிதமே பாஸ்கரன் எழுதவில்லை.

''அன்புமிக்க அக்காவுக்கு,

உன்னைப் போலக் கடமையைச் செய்யும் புத்தி ஆண்டவன் எனக்குக் கொடுத்து விட் டான். நான் சேம்பேறியாக வாழ, முயற்சி செய்தேன். வந்த இடத்தில் உன்னோடும் அருணாவோடும் நான் பேச வில்லை. ஆனால் அருணாவின் நோய் நீங்குவதற்கு, எனக்கு ராணுவத்தில்தான் நல்ல ஊதியம் கிடைக் கும். ஆகவே முன்னர் வேண்டாமென்ற பதவியை இப்போது ஒப்புக் கொள்ளுகிறேன். அவள் பிழைத்து எழும் வரை கவலையோடு மருந்தும் பழமும் கொடு. என்னால் எவ்வளவு பணம் உதவ முடியுமோ அதை மாதா மாதம் அனுப்பிக் கொண்டிருக்க ஆண்டவன் எனக்கு நீண்ட ஆயுளைக் கொடுக்கப் பிரார்த்தனை செய். என்றுமே அங்கே வர மாட்டேன். அவளைப் பார்த்துச் சிக்கவும் மாட்டேன். இதை அவளிடம் சொல். சிறிதும் மனங் கலங்காதே, அக்கா!

என்றைக்கும் உன் அருமைத் தம்பி

பாஸ்கரன்.''

''அம்மா! எனக்குக் கடிதம் வந்ததா?''

''இல்லை. உன் மாமன் எழுதியிருக்கிறான். உன்னுடைய வைத்தியச் செலவுக்காகப் பணம் அனுப்புகிறானாம்.''

''அவர் இங்கே வந்தாரா?''

''வரவில்லை. அவன் வரவும் இஷ்டப்பட வில்லையாம்.''

''அவர் தெய்வம் அம்மா. வந்தார் என்றால் நான் உடனே அவமான உணர்ச்சி தாளாமல் செத்தே போய் விடுவேன்.''

மேலும் மகள் சொல்லுவதைக் கேட்கப் பிரியம் இல்லாதவள் போன்று மீனாட்சி குடிசைக்கு வெளியே வந்தாள். அந்தக் கடிதத்தோடு ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொகைக்கு ஒரு செக் இருந்தது.

மறு வாரம் சுகவாசமும், தகுதியான வைத்திய வசதியும் பெற அவர்கள் வேறு வீட்டுக்குப் போனார்கள்.



குழந்தைகள் குஷி குறைந்து
இருக்கும் சமயம் பார்லேயின் ஸ்வீட்ஸ் &
டாபீஸ் அவைகளுக்கு அளித்தால்
கணத்தில் குஷி மிகுந்து காணப்படும்.

## குழந்தைகளுக்கு உற்சாகம் தருவது.

# பார்லேயின் பெப்பர்மின்டுகள்: டாபீஸ்

அசல் பழருசி நிறைந்தவை!

# பெருங்கடம்பனூர்ப் பெண்

'' மாப்பட்டை, மருதப்பட்டை, மன்னார்குடி தென்னமட்டை, காகக்கு இரண்டு மட்டை, கழுக்கு முழுக்குடா, எற்றுக்கடா, வெந்தைப் பழமடா..'' உச்சஸ்தாயியிலே பாடிக் கொண்டு ஒரு சிறுவன் நான்கு பேர்களுக்குப் பாய்ச்சல் காட்டிக் கொண்டு இருந்தான். பாடிவந்த சிறுவனுக்கு 'மூச்சு' நின்றுவிடும் போல இருந்தது. அந்தச் சமயம் பார்த்துப் பின்னால் இருந்த மற்றொரு பையன் அவன்மீது பாய்ந்து கோழிக் குஞ்சைப் பருந்து தூக்கிச் செல்வதைப்போன்று கவ்விக் கொண்டு ஓடினான். பாடியவன் திமிறினான். பிடித்தவன் இறுக்கினான். மூச்சு விடாமல் பாடிக் கொண்டு இருந்தவன் மீது மேலும் மூன்று பேர் பாரம் ஏறியது. அவனுக்கு மூச்சு—அதாவது பாட்டு—நின்றது.

சத்தத்தையும், சந்தடியையும் பரப்பிக் கொண்டிருந்த அந்தச் 'சடுகுடு' ஆட்டம் ஜன்னல் பக்கம் வீதியையே பார்த்துக் கொண்டிருந்த ராஜாராமனுக்கு எரிச்சலை உண்டாக்கியது.

'' ஏய்..வாசல்லே என்னடா சத்தம்? அந்தண்டை போய் விளையாடுங்கடா!'' என்று ராஜாராமன் ஒரு அதட்டல் போட்டான். வெளிச் சத்தம் கொஞ்சம் குறைந்தது.

ஆனால், '' சர்க்கார் ரோட்டிலே விளையாடினால் இவருக்கு என்னவாம்? பெரிசாவுல்ல அதிகாரம் பண்ணுகிறாரு!'' என்று விளையாட்டுக் கும்பலின் மத்தியிலிருந்து ஒரு கட்டைப் பயலின் முணுமுணுப்பு ராஜாராமன் காதில் விழுந்தது. ராஜாராமனுக்கு 'சுருக்' கென்று கோபம் கிளம்பியது!

'' என்னடா சொன்னே?'' என்று அதட்டிய படி ராஜாராமன் வெளியே வந்தான். விளையாடிக் கொண்டிருந்தவர்களில் முக்கால் வாசிப் பேர் ஓட்டம் பிடித்தனர்.

'' இனிமேல் இந்தப் பக்கம் வந்து விளையாடுங்க, தோலை உரிச்சுடுவேன்!'' என்று உறுமினான் ராஜாராமன்.

'' தோலை உரிச்சிடுவாரு..பெரிய சிப்பாய் பார்!'' வீதி ஓரத்திலே நின்று கொண்டிருந்த சிறுவன் ஒருவன் வேகமாகச் சொல்லிக் கொண்டு, ராஜாராமனை முறைத்துப் பார்த்த படி ராஜ நடை போட்டான்.

'' ஏய்....என்ன சொன்னே? பெரிய சிப்பாயா! உன்னை....'' பல்லை நற நற வென்று கடித்துக் கொண்டு அவன் பக்கம் பாய்ந்தான். அந்தச் சிறுவன் அவன் கையில் அகப்பட்டால்தானே!

'' ஹாம்..நீங்க என்கிட்டே வசமா மாட்டுவீங்க. அப்போ பார்த்துக்கிறேன்!'' என்று ராஜாராமன் கறுவினான். அவன் உள்ளம் தோல்வியால் குமைந்து எரிந்தது.

''இந்தாங்க....சிறிசுகளிடத்திலே போய்ச் சரிக்குச் சரியா நிற்கிறீங்களே?'' என்று அவனது வீட்டிலிருந்து ஒரு குரல் கேட்டது. ராஜாராமன் திரும்பிப் பார்த்தான். அங்கே நாகலக்ஷ்மி நின்று கொண்டிருந்தாள். அவன் ஏதோ முணங்கிக் கொண்டே வீட்டுக்குள்ளே வந்தான்.

'' இந்தக் காப்பியைச் சாப்பிடுங்க!'' என்று கூறிய நாகலக்ஷ்மியின் பார்வை மேஜைமீது கிடந்த கடிதத்தின்மீது பதிந்தது.

'' இந்தக் கடிதம் எங்கே இருந்து வந்திருக்கிறது?'' அவள் மிகவும் ஆவலாகக் கேட்டாள். ஆனால் ராஜாராமனோ அவளை முறைத்துப் பார்த்து,



அவன் கையில் இருந்த காப்பியை வாங்கி 'மடக் மடக்' கென்று குடித்தான். நாகலக்ஷ்மி அவன் ஏதோ கோபத்தில் இருக்கிறான் என்று எண்ணி மேற்கொண்டு கேள்வி யொன்றும் கேட்காமல் மௌனமாக இருந்தாள்.

'பெரிய சிப்பாய்..' அவன் வாய்க்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டு தனது இரண்ட தோள்களையும் மார்பையும் ஒரு முறை தோட்டமிட்டுக் கொண்டான்.

அவன் உண்மையில் சிப்பாய்தான்! ஆனால் பிறர் அவனைப் பார்த்துச் சிப்பாய் என்று சொல்லும்போது அவனுக்கு ஏன் அவ்வளவு கோபம் வரவேண்டும்?

அவனுடைய உதட்டிலே மின்னிய சிரிப்பை எதிரொலிப்பது போன்று மேஜை மீது கிடந்த கடிதம் படபடத்தது. ராஜாராமன் அதைக் கையில் எடுத்துப் பிரித்தான். முகத்திலே ஏதோ ஒரு ஆழ்ந்த யோசனைக் குறி தொக்கிவிட்டது.

"ராஜாராம்! நான் வருகின்ற புதன் கிழமை பெருங்கடம்பனூர் சென்று பெண்ணைப் பார்த்து விட்டு வரலாம் என்று ஏற்பாடு செய்திருக்கிறேன். எனக்குத் துணையாக நீயும் உடன் வந்தால் நலமாய் இருக்கும். உன்னை மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்ளுகிறேன். புதன்கிழமை மத்தியான ரயிலுக்கு நீ கண்டிப்பாக வந்து விடு. இருவரும் சேர்ந்து போகலாம். இதில் போய் உன் சிப்பாய் விறைப்பைக் காட்டிக் கொண்டு வராமல் இருந்து விடாதே! சீதாபதி"

இவ்வாறு எழுதியிருந்தது. அக்கடிதத்தை மெல்ல மடித்துக் கைகளுக்குள்ளேயே கசுக்க ஆரம்பித்தான். மீண்டும் ஏதோ யோசனை!

"இதில் போய் உன்னுடைய சிப்பாய் விறைப்பைக் காட்டிக் கொண்டு வராமல் இருந்து விடாதே!"—இந்தக் கடைசி வரி அவனுடைய கண்களை உறுத்தியது.

'நான் எப்படி அவனுடன் பெருங்கடம்பனூர் போவேன்?' என்று கிளம்பிய ஒரு கேள்வி அவனுடைய உள்ளத்தை உலுக்கியது.

"ஏறி உலுக்கடா! எலந்தைப் பழமடா" என்று தூரத்திலிருந்து குரல் கேட்டுக் கொண்டிருந்தது. அவனுடைய உள்ளத்திலே உலுக்கல் ஏற்பட்டுக் குலுங்கி விழுந்த அந்தப் பழத்தில்தான் எவ்வளவு புளிப்பு!

★

ராஜாராமன் புதிதாகத் தைத்து வந்த உடுப்புகளை அழகு பார்த்துக் கொண்டிருந்தான். அவனது உள்ளத்திலே களிப்பும் கர்வமும் கும்மாளியிட்டுக் கொண்டிருந்தன.

"ராஜாராமா! உனக்கு மேற்கொண்டு லீவு கொடுத்து விட்டார்களா?" என்று அவனுடைய பெரியம்மா கேட்டாள்.

"இது வரையிலும் வரல்லே. அநேகமாக நாளை அல்லது நாளை மறுதினம் ஆர்டர் வந்து விடும்!" என்று பதில் சொன்னான். அவனுடைய பெரியம்மா அவனையும் அந்த உடுப்புகளையும் ஏற இறங்கப் பார்த்து விட்டு ஒரு பெருமூச்சு விட்டாள்.

"என்ன இருந்தாலும் உனக்கு இவ்வளவு பிடிவாதம் கூடாது. கோபம் என்றால் கொஞ்ச நாட்களுக்கு இருக்கலாம். எப்போதுமே அதைப் பாராட்டினால் அப்புறம் என்னத்துக்கு ஆகும்? என்னதான் உனக்கு உன் மாமனாரிடம் கோபம் இருந்தாலும் நீ இது போலச் செய்யக் கூடாது!" என்றாள்.

"பெரியம்மா. நீயெல்லாம் சும்மா பேசாமல் இருக்கணும். இது என்னுடைய சொந்த விஷயம். மாமனாரா அவன்? கட்டின புருஷன்கூட மனைவி ஒரே இடத்திலே வாழ்வதில் ஏதோ குடி முழுகிப் போயிடும் என்று சொன்னவனுக்கு மனிதன் என்று மரியாதை வேறு கொடுக்க வேணும்? இம்..." என்று அவன் பல்லைக் கடித்தான்.

"ராஜாராமா! அந்த ஆளு பட்டிக்காட்டு ஆசாமி. ஏதோ தவறிப் போய் ஒன்று சொல்லி விட்டால் அதற்காக ஒரு சின்னஞ் சிறு பெண்ணை வாழாமலா அடிக்கிறது?"

"சின்னஞ்சிறுக! வாயிலே விரலைக் கொடுத்தால் கடிக்கத் தெரியாது! இம்! அவள் என்றைக்கு நான் கூப்பிடும் போது வராமல் இருந்தாளோ, அன்றைக்கே அவளுக்கு நான் தலை முழுகி விட்டேன். இந்தக் கல்யாணம் முடியட்டும். பிறகு அவள் கிட்டேயே இந்தப் பெருங்கடம்பனூர்ப் பெண்ணை அழைத்துக் கொண்டு போய்ச் சரியான புத்தி சொல்கிறேன்!" என்று அவன் உறுமினான்.

வாசலில் 'ஜல் ஜல்'லென்று ஒரு வண்டி வந்து நின்றது!

"மாமி.." — ஒரு பெண் குரல் கேட்டது. ராஜாராமன் வாசற்புறம் வந்தான். அவனுக்கு அந்தப் பெண்ணைக் கண்டதும் தூக்கி வாரிப் போட்டது.

"நீ எங்கே இங்கே வந்தாய்?"—என்று அவளிடம் சீறினான். அவள் பதில் ஒன்றும் பேசாமல் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றாள்.

"உனக்கு இங்கே என்ன வேலை? திருவெண்காட்டுக்குத் திரும்பிப் போய் உன் அப்பாவோடேயே இரு! போ.." என்று மீண்டும் அவளிடம் பாய்ந்தான்.

"ராஜாராமா, கொஞ்சம் இரு. நாகு.. நீ இப்படி வாம்மா.." என்று ராஜாராமனின் பெரியம்மா அந்தப் பெண்ணை அன்போடு அழைத்தாள். வந்த பெண்—நாகலக்ஷ்மி அவள் பக்கம் சென்றாள்.

"பெரியம்மா! அவள் உள்ளே வந்தாளானால் நான் இப்பொழுதே வெளியே போய் விடுவேன்! அவளும் நானும் சேர்ந்து இருக்கிறது என்பது இனி நடக்கவே நடக்காது!" என்று அவன் குதித்தான்.

"அதற்காக வீடு தேடி வந்தவளை விரட்டி விடுவதா?" என்று அந்த அம்மாள் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டாள்.

"எனக்கு எல்லாம் தெரியும், பெரியம்மா! நான் இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறேன் என்கிற செய்தியை இவளுக்கு எழுதி இங்கே இவளை இப்போது வரவழைத்திருக்கிங்க! உங்க வேலையெல்லாம் எனக்குத் தெரியும், பெரியம்மா!"

"அப்படியே வைத்துக் கொள்ளேன்.... அதிலே என்ன தப்பு?"

"பெரியம்மா!" என்று கத்தினான்.

"நீங்க உங்கள் இஷ்டம் போலவே இரண்டாம் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். ஆனால் என்னை மாத்திரம் விரட்டிவிடாதீங்க" என்று நாகலக்ஷ்மி தேம்பினாள்.

"என்ன வேஷம் போடுகிறாய்? அன்றைக்கு நான் கூப்பிடும்போது இந்த யோசனை எங்கே



போச்சு? பட்டாளத்திலே நான் இருக்கேன், என்கூட நீ வந்து இருந்தால் உன் தலையிலே குண்டு வந்து விழுந்து நீ செத்துப் போயிடு வேன்னு உன் அப்பன் சொன்னானே! அப்போ இந்த அழுகையைக் காட்டி இருந்தால் அல்லவா நல்லா இருந்திருக்கும்!''

''நான் செய்ததெல்லாம் தப்பு! என்னை மன்னிச்சுடுங்க'' என்று நாகலக்ஷ்மி அவன் காலில் விழுந்தாள். கண்ணீர் அவன் கால்களை நனைத்தது.

''சிச்சீ..விடு காலை'' அவன் அவளை எட்டி உதைத்தான். அவள் சுருண்டு போய் ஒரு மூலையில் விழுந்தாள்.

''பெரியம்மா! நீ இதுபோலச் செய்ய வேண்டுமென்று எத்தனை நாட்களாக நினைத்துக் கொண்டிருந்தாய்? இவளை இங்கே கொண்டு வந்து வைத்துக் கொண்டு கல்யாணத்தைத் தடுத்து விடலாம் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டான் அவன்.

'' அதெல்லாம் ஒன்றுமில்லை, ராஜாராமா!'' அந்த அம்மாள் பதறினாள்.

''என்ன நொள்ளை? இந்தச் சமயத்திலே பெண்ணு கொடுக்கிறேன்னு சொன்ன அந்தப் பெருங் கடம்பனூர்க்காரர் வந்து பார்த்தால் என்ன நினைத்துக் கொள்வார்?'' என்று கோபத்தினால் பொருமினான்.

நாகலட்சுமி கண்களைக் கசக்கியபடியே மெள்ள ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

''ஹூம்..உனக்கும் ரொம்பத் திமிர் அதிகமாகி விட்டது!'' அவன் கையை ஓங்கினான்.

''நீங்க நல்லா அடியுங்க! எது வேணுமானாலும் செய்யுங்க! உங்களுக்கு நான் குறுக்கே இருக்கமாட்டேன். என்னாலே நீங்க இந்த இரண்டாங்கல்யாணம் செய்து கொள்வதற்கு ஒரு இடைஞ்சலும் ஏற்படாது! எனக்கு அதிலே பூர்ணசம்மதம்..'' அவள் கண்களைக் கசக்கியபடி நின்றாள். அவனுக்கு 'ஸ்வரம்' கொஞ்சம் இறங்கியது! அவனுடைய ஓங்கிய கரங்கள் ஓய்ந்து போய் நின்றன! அவன் அர்த்தமில்லாமல் ஏதோ முணுமுணுத்தான். அதற்குள் வெளியில் ஏதோ சந்தடி கேட்டது! அவன் கவனம் திசை மாறியது. வெளிப்புறம் திரும்பிய அவனுடைய பார்வையிலே ஒரு அதிர்ச்சி! அப்போதுதான் அவனுக்கு இரண்டாவது தாரமாகப் பெண் தருவதற்கு ஒப்புக்கொண்ட பெருங் கடம்பனூர் ராமசாமி முதலியார் உள்ளே வந்து கொண்டிருந்தார்!

''வாங்க..வாங்க..''—ராஜாராமன் தன்னுடைய உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு அவரை வரவேற்றான்.

''ராஜாராம்! உங்களுக்கு ஒரு தந்தி டெல்லியிலிருந்து வந்திருக்கு?'' என்று அவர் பதில் அளித்தவாறே ஒரு பிரித்த தந்திக் கவரை அவனிடம் நீட்டினார்.

''என்ன..'லீவுக்கு சாங்ஷன்' ஆகி இருக்கிறதா?'' என்று சொல்லிக் கொண்டு அவன் அந்தத் தந்தியை அலட்சியமாக வாங்கினான்.

'உன்னுடைய இரண்டாம் கல்யாணம் சட்ட விரோதமானது. உடனே கல்யாணத்தை நிறுத்திவிட்டு மேலதிகாரிகளுக்குச் செய்தி தெரிவிக்கவும். உன்னுடைய ரஜா நீடிப்புக் கோரிக்கை ஏற்கப்படவில்லை' என்று எழுதப்பட்டிருந்தது.

ராஜாராமனின் முகம் பேயறைந்ததுபோல ஆகிவிட்டது! அவன் அந்தத் தந்தியையே திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்தான். அவனுக்கு எதிரில் நிற்கும் ராமசாமி முதலியாரைப் பார்ப்பதற்கே அவனுக்கு மிகவும் கூச்சமாய் இருந்தது.

அவனுடைய பெரியம்மாவுக்கும் நாகலட்சுமிக்கும் ஒன்றுமே விளங்கவில்லை.



எண் சாண் உடம்பிற்கு
சிரசே பிரதானம்
குளிர்ச்சி
நறுமணம் மற்றும்
கேச சிங்காரம்



# டி.எஸ்.ஆர்

- ★ சந்தனாதித் தைலம்
- ★ அரகஜா
- ★ அமுக்கிரா விதைத் தைலம்
- ★ கோதுர் ஹேர் ஆயில்



**டி.எஸ்.ஆர் & கோ.**
கும்பகோணம்

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் : காந்தி ஏஜென்சீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு ○ ... லைகோடு, கேரளாவுக்கு சோல் ஏஜெண்டு: R. பாலாட்டார், (...1932), ... கோயமுத்தூர் வங்காளத்தில் கிடைக்குமிடம்: ... ஸ்டோர்ஸ், 179/1, ... ரோடு, கல்கத்தா-29

---

## பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டுபிடிக்கப்பட்ட பிறகு எக்ஸிமா, முகப்பரு, படை, ரத்தக்கட்டி முதலிய அருவருப்புத் தரக்கூடிய சரும உபாதைகளினால் அவதியுற அவசியமே இல்லை. நோயாளி என நினைத்து நண்பர்கள் விலகக் காரணமான அருவருப்பான சருமத்தை இம் மருந்தினால் குணப்படுத்துங்கள்

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய கலிம்பு. பிசுக்கற்றது. ஒன்பது மூலப் பொருள்களின் சேர்க்கையால் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை மூன்று வழிகளில் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமான கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றிச் சுத்தமாக்குகிறது

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதை விடச் சீக்கிரமாகவே நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்திச் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K.









கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பின் நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். பத்து நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்

### திருப்திக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்கி உபயோகித்து அதனால் ஏற்படும் பலனைக் கவனியுங்கள். ஒரு வாரத்தில் சருமத்தைச் சுத்தப்படுத்துகிறது. திருப்தி அளிக்கும்படி சருமத்தைச் சுத்தப்படுத்தாவிடில் அதற்கான செலவைப் பற்றிக் கவலையுற வேண்டாம். அதன் காலி பாக்கெட்டைத் திருப்பி அனுப்பினால் உங்களுக்கு முழுப்பணம் வாபஸ் செய்யப்படும். அதற்கு அளிக்கப்படும் உத்தரவாதமே உங்களுக்குச் சிறந்த பாதுகாப்பு

''ராஜாராம்! தந்தியிலே என்ன எழுதி யிருக்கு!'' அவனுடைய பெரியம்மா துடித்தாள். அவன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை!

''ராஜாராம்! தந்தி என்ன வேடிக்கையாக இருக்கிறதே? இராணுவத்தில் இருக்கிறவங்க ளெல்லாம் இரண்டாம் கல்யாணமே செய்து கொள்ளக்கூடாதா?'' என்று அவர் கேட்டார். ராஜாராமன் ஒன்றும் பதில் சொல்லாமல் மௌனமாகவே இருந்தான்.

''ராஜாராம்! நான் கேட்கிறேன் என்று வருத்தப்பட்டுக் கொள்ளாதே..உள்ளபடியே உன்னுடைய முதல் தாரம் தவறிப் போய் விட்டதா? அல்லது..'' அவர் வார்த்தைகளை மென்று விழுங்கினார்.

நாகலட்சுமிக்கு அவருடைய கேள்வியைக் கேட்டதும் 'சுரீர்' என்றது. ராஜாராமனுக்குக் கண்களிலிருந்து நீர் பெருகியது!

''நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.. நான் அந்த விஷயத்திலே உங்களிடம் பொய் சொல்லி விட்டேன்.'' அவன் தலையைக் குனிந்து கொண்டான்.

''நான் தந்தியைக் கண்டதுமே அப்படித்தான் நினைத்தேன்..நீ சொன்ன ஒரு பொய் எதுபோன்ற ஒரு நிலைமையை உண்டாக்கி இருக்கிறது என்பதைக் கண்டாயா? இதற்கு மேலே என்ன செய்வதாக யோசனை செய்திருக்கிறாய்?'' அவர் நிதானமாகக் கேட்டார்.

''நீங்கள் எது சொல்கிறீங்களோ அதை நான் கேட்கிறேன்!'' அவன் குரல் கரகரத்தது.

''இதிலே இனிமேல் நான் என்ன சொல்வதற்கு இருக்கு?'' அவர் கண்களிலிருந்து பொங்கிய நீரைத் துடைத்தபடியே சொன்னார்.

அவர்களுடைய பேச்சையெல்லாம் அது வரையில் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்த நாகலட்சுமிக்குத் திடீரென்று ஒரு யோசனை உண்டாயிற்று!

''ஐயா! நான்தான் இவருடைய முதல் சம்சாரம். இவங்க இரண்டாங் கல்யாணம் செய்து கொள்வதிலே எனக்குப் பரிபூரண சம்மதம்! உங்களுக்கு வேணுமானாலும் அதை எழுதித் தருகிறேன்! அதுக்கு மேலே என்ன ஆட்சேபனை இருக்கு?'' அவள் ஆவேசம் வந்தவள் போலப் பேசினாள். இதைக் கேட்டதும் ராஜாராமனுக்கும் கொஞ்சம் 'தெம்பு' ஏற்பட்டு விட்டது.

''அதெல்லாம் ஒன்றும் நடக்காது, அம்மா! எனக்கும் உன்னைப்போல ஒரு பெண்ணு இருக்கு! அதுபோல நடக்கிற கல்யாணத்தை நான் எப்போதுமே அனுமதிக்க மாட்டேன்!'' அவர் மிகவும் அழுத்தமாகச் சொன்னார்.

''அப்படியானால் இப்போ என்ன செய்கிறீங்க?'' அவள் அவரிடமே கேட்டாள். அவர் ஒன்றும் பேசவில்லை! ராஜாராமனுக்கு நாகலட்சுமியின் விதரணையான பேச்சைக் கேட்கக் கேட்க ஒரே ஆச்சர்யமாகப் போய் விட்டது! அவள் தன்பேரில் காட்டும் பரிவைக் காணக் காண அவனுக்குத் தன்மீதே ஒரு ஆத்திரம் உண்டாயிற்று!

'என்ன, முட்டாள்தனம்! ஆத்திரத்திலே நாகலட்சுமியின் அன்பைப் புரிந்து கொள்ளாமல் அவளுக்கு எவ்வளவு பெரிய கொடுமையைச் செய்து விட்டோம்' என்று மனத்துக்குள்ளாகவே புழுங்கிக் கொண்டான். ஆனால் விஷயம் தலைக்கு மீறிப் போன பின் நொந்து கொண்டு என்ன பயன்?

மெள்ள ராஜாராமனின் பெரியம்மா பேச ஆரம்பித்தாள்.

''நீங்க என்ன சொன்னாலும் நாங்க கேட்கத் தயாராக இருக்கிறோம்!'' என்றாள்.

''நான் என்ன சொல்வது? இந்தக் கல்யாணத்தை நிறுத்திவிட வேண்டியதுதான்!'' என்று அவர் கண்கலங்கக் கூறினார்.

''என்ன?'' என்ற ராஜாராமன் அதிர்ச்சியடைந்து கேட்டான்.

''ஒருவரைக் கெடுத்து இன்னொருவர் எப்போதுமே வாழ்ந்தது கிடையாது. இந்த ஒரு உண்மை இதுவரையில் பொய்த்துப் போனது கிடையாது! இப்போ இந்தப் பெண்ணுடைய வாழ்க்கையைக் கெடுத்துவிட்டு உன்னை என் மகள் கட்டிக் கொண்டாலும் நாளைக்கு அவள் நல்லா வாழ்ந்துவிட முடியுமா? இந்தப் பெண்ணாவது சுகமாக இருக்கட்டும். நான் வருகிறேன்....அம்மா நீ உன்னுடைய புருஷனோடு சௌக்கியமாக இரு, அம்மா!'' என்று அவர் நாகலக்ஷ்மியை ஆசீர்வதித்து விட்டு வேகமாகப் போனார்.

★

ராஜாராமன் எங்கெங் கெல்லாமோ சுற்றிவிட்டு அலுத்துப் போய் வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தான். அவனுக்குக் காலையிலிருந்தே மூளை சரியாக இல்லை. அவனுடைய கைக்கடிகாரம் மணி ஐந்து என்று காட்டிக் கொண்டிருந்தது! அவன் தன்னுடைய வீடு இருக்கும் திருப்பத்தின் பக்கம் திரும்பினான். அவனது வீட்டுக்கு எதிரில் சிறுவர்கள் மிகவும் 'குஷியோடு' 'சடுகுடு' ஆடுவதற்கென்று கோடு கிழித்துக் கொண்டிருந்தனர். அவனுக்கு இதைக் கண்டதும் ஆத்திரம் கிளம்பியது.

''ஏய்..வீட்டு வாசலிலே என்னடா விளையாட்டு? போங்கடா'' என்று அதட்டினான்.

''மாமாகிட்டே கேட்டுக்கிட்டுத்தான் விளையாடுவதற்கு ஆரம்பித்தோம்..'' அந்த விளையாட்டுச் சிறுவர்கள் கும்பலிலே யிருந்த ஒருவன் கூறினான். ராஜாராமனுக்கு அந்தச் சிறுவனுடைய பதில் ஒரு குழப்பத்தை உண்டாக்கியது.

''ஏய், ராஜாராமா! எங்கே போய்ச் சுற்றி விட்டு வருகிறாய்?'' என்று அவனுடைய வீட்டிலிருந்து ஒரு குரல் உரிமையோடு கேட்டது, அவன் காதில் விழுந்தது.

''சீதாபதி! நீ எப்போடா வந்தாய்?'' அவனுக்கு உண்டான மகிழ்ச்சி 'டக்'கென்று 'சுருதி' இறங்கியது.

''மத்தியானம்தான் வந்தேன்'' என்று அவன் சாவதானமாகச் சொன்னான். அவன் ராஜாராமனின் முகத்திலே ஏற்பட்ட மாறுதலைக் கவனிக்கவே இல்லை. அவர்கள் இருவரும் வீட்டினுள் சென்றனர்.

''என்ன சீதாபதி! பெருங்கடம்பனூர் போய்ப் பெண்ணைப் பார்த்துவிட்டு வந்துவிட்டாயா? பெண் உனக்குப் பிடித்திருக்கிறதா?''

''அதுவா? அது ஒரு எதிர்பாராத மாறுதல்! நேற்று வரையிலே பெண்ணைப் பார்க்கப் பெருங்கடம்பனூர் போகிறதுன்னு தான் வீட்டிலே எல்லாரும் முடிவு செய்துவைத் திருந்தாங்க! நேற்று மத்தியானம் பெருங்கடம்பனூர் ஆசாமி ஒருவர் எங்கள்

வீட்டுக்கு வந்தார். அவர் சொன்ன சில செய்திகளிலிருந்து இந்தச் சம்பந்தத்தை மெதுவாகத் தட்டிக் கழித்து விடுவதற்கு முடிவு செய்து விட்டோம்!''

''அந்த ஆள் அப்படி என்ன சொன்னான்?''

''நான் பார்க்கப் போவதாய் இருந்த பெண்ணை முன்புகூட ஒரு ஆள் பார்த்துக் கல்யாணத்துக்குத் தேதியெல்லாம்கூடக் குறித்து, கடைசி நேரத்திலே பெண்ணுக்கு இருக்கிற தோஷத்தைத் தெரிந்துகொண்டு கல்யாணத்தையே நிறுத்தி விட்டானாம்! அதற்குப் பிறகும் இதுபோலவே பல தடவைகள் பல பேர்கள் பெண் பார்க்க வருகிறதும் அந்தப் பெண்ணுக்குத் தோஷம் இருக்குதுன்னு இந்த இடத்தை நழுவ விட்டு விடுவதுமாக இருந்ததாம்! இந்த ஏக்கத்திலேயே அந்தப் பெண்ணுடைய அப்பாவும் இறந்து போய் விட்டாராம்....இந்தப் பெண்ணைக் கொண்டு வந்து ஜாடையாக என் தலையிலே கட்டுவதற்கு முயற்சி செய்கிறார்கள்! எப்படியிருக்கிறது?''

''ச்சு.... பாவம்.... தகப்பனில்லாத பெண்ணு, இம்ம்...அப்படி அந்தப் பெண்ணுக்கு என்னதான் தோஷம் இருக்கு?''

''அந்தப் பெண்ணுக்கு என்ன தோஷம் இருக்கிறது என்பதை மட்டும் இதுவரையில் நான் விசாரித்த இடங்களில் ஒருவர்கூட என்னிடம் சொல்லவில்லை, ராஜாராம்! எல்லோரும் அந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகி நிறுத்தப்பட்ட செய்தியைத் தான் என்கிட்டே சொன்னார்கள்!''

''நல்ல ஆள் சீதாபதி நீ! கல்யாணம் நிச்சயமாகிக் கடைசி நேரத்திலே நின்றுபோகிறது ஒரு தோஷமா? இதுபோல எத்தனையோ தடவைகள் எத்தனையோ இடங்களிலே நடந்திருக்கு! அதையெல்லாம் ரொம்ப நல்லா விசாரித்துத்தான் ஒரு முடிவுக்கு வரணும்.''

ராஜாராமன் தன்னுடைய பழைய அநுபவத்தை மனத்தில் எண்ணிச் சிரித்தான்.

சீதாபதிக்கு அவன் சொல்வதும் நியாயமாகப் பட்டது! அவன் ஏதோ யோசனையில் தலை குனிந்தான்.

''பெருங்கடம்பனூரில் அந்தப் பெண் யாருடையமகள்?'' என்று ராஜாராமன் கேட்டான்.

''அதுவா..ராமசாமி முதலியார் மகள்.''

ராஜாராமனுக்குத் தூக்கிவாரிப்போட்டது!

''ராமசாமி முதலியார் மகளா? சீதாபதி! அந்தப் பெண் பேரு பாக்கியம்தானே?'' அவன் படபடப்போடு கேட்டான்.

''ஆமாம், உனக்கு அவர்களையெல்லாம் தெரியுமா?'' சீதாபதி ஆச்சர்யத்தோடு கேட்டான். ராஜாராமனுக்குத் தலையே சுழல்வதுபோல இருந்தது. அவன் நெற்றியை அழுத்திக் கொண்டான்.

''தெரியுமா என்ன! சீதா..அந்தப் பெண்ணுக்குத் தோஷமுமில்லே ஒன்றுமில்லே. ராமசாமி முதலியார் இறந்தா போய் விட்டார்? இம்ம்..சீதாபதி..நீ அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதற்குக் கொடுத்து வைத்திருக்கணும்! எழுந்திரு! முதலில் உங்கள் வீட்டிலேயிருந்து பெண்ணு பார்க்கிறதுக்கு எல்லோரையும் வரச்சொல்லித் தந்தி அடி!'' அவன் சீதாபதியை உலுக்கினான்.

''என்ன ராஜா..நீ சொல்கிறதே எனக்கு ஒன்றும் புரியவில்லையே?''

''இதுவா? எல்லோரும் ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு கல்யாணத்தை நடத்தணும்னு சொல்வாங்க! ஆனால் உன்னுடைய கல்யாணம் ஒரு உண்மையை நீ தெரிந்து கொண்டாலே நடந்து போயிடும்! அந்தப் பெருங்கடம்பனூர்ப் பெண்ணை முதலில் கல்யாணம் - இரண்டாவது தாரமாக — நான் தான் செய்து கொள்வதாக இருந்து கல்யாணம் நின்றுபோச்சு! அதுக்குக் காரணம் அந்தப் பெண்ணோட தோஷமில்லே! எல்லாம் என்னுடைய தோஷம்தான்! உனக்குச் சந்தேகமா இருந்தால்......'' என்றவன், ''நாகலட்சுமி!'' என்று கூப்பாடுபோட்டான்.

உள்ளேயிருந்து நாகலட்சுமி வந்தாள்.

''நாகு! என்னோட இரண்டாங் கல்யாணம் எப்படித் தடைப்பட்டது? அதை இவன்கிட்டே கொஞ்சம் சொல்லு.'' ராஜாராமன் மிகவும் குஷியாகச் சொன்னான். அவனுக்கு மனத்தில் உறுத்திக் கொண்டிருந்த ஒரு பெரிய பாரம் இறங்கியது போன்ற ஒரு உணர்வு!

''நீங்க ஒன்றும் சொல்லவேணும். இவன் கிடக்கிறான்!....உம். ராஜா எழுந்திரு! போய் வீட்டுக்குத் தந்தி கொடுத்து விட்டு வந்துடுவோம்'' என்று சீதாபதி ராஜாராமனுக்குத் 'தார்' போட்டான். இரண்டு பேரும் வேகமாக வெளியே கிளம்பினார்கள். நாகலட்சுமிக்கு ஒன்றுமே புரியவில்லை! அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

அவர்கள் இரண்டு பேரும் ஆனந்தமாக அளவளாவிக் கொண்டே போனார்கள்.

''....ஏறி உலுக்கடா..எலந்தைப் பழமடா'' என்ற சிறுவர்களின் ஆட்டப்பாட்டு அவர்களுக்குத் தொடர்ந்து கேட்டது.

## பையன் சாமர்த்தியம்!



ரேமெக்ஸ்
பால் உணவு

குழந்தைகளுக்கு ரேமெக்ஸ் புகட்டி அவர்களின் வளர்ச்சியைக் கவனியுங்கள்!

## உலகப் பிரசித்தி பெற்றது

லிச்சென்ஸா உஷ்ணப்பிரதேசத்திற்குரிய சகல சரும நோய்களிலும் எவ்வித ஹானியுமின்றி மிருதுவாக குணம் தருகிறது. செந்நிறப்படைகள், படர்தாமரை, சிராய்ப்புகள், வெடிப்புகள், எரிச்சலூட்டும் சகலவித ரணங்கள், தீப்புண்கள், பனிவெடிப்புகள், காலில் பித்தவெடிப்புகள் முதலிய இனங்களில் லிச்சென்ஸா உதவுகிறது. மூலநோய்க்கு உலக பிரசித்திபெற்ற நிவாரணியாகிய ஹெடன்ஸாவை தயாரிப்பவர்களே லிச்சென்ஸா மெழுகையும் உற்பத்தி செய்கின்றனர்.




## லிச்சென்ஸா

ஜெர்மனியில்
தயாரிக்கப்பட்டது.

எங்கும் கிடைக்கும்.

DCZ 2

---

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

**85% கிருமிகளை ஒழிக்கிறது சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை**



தேவியின் கடிதம்

# ஆடம்பரம் வேண்டாம்

வசுமதி ராமசாமி

அன்புக்குரிய சுஜாதா,

துணிகள் வாங்குவதை விடத் தைப்பதும், சலவை செய்வதும் அதிகச் செலவு ஆகிறதென்று கடிதம் எழுதியிருக்கிறாய்.

ஒரு இத்தாலி தேசத்துப் பேசும் படத்துக்குப் போயிருந்தேன். மத்திய தரக் குடும்பத்துப் பெண் சமையல் வேலைகளைச் செய்வதுடன், தன் குடும்பத்துக்குத் தேவையான துணிகளைச் சுறுசுறுப்புடன் அன்றாடம் தைப்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அந்தத் தேசங்களில் பெண்கள் தையல் வேலை தெரியாமல் இருக்க மாட்டார்கள். முன்னேறிய நாடுகளில் வீட்டில் சலவை செய்வதற்கும் வசதி இருக்கிறது.

என்னுடைய சிநேகிதி ஒருவர் பஞ்சாபைச் சேர்ந்தவர். அவர் உடம்பு அசௌக்கியமாகப் படுக்கையில் இருந்தால்கூடத் தையல் வேலை செய்து கொண்டே இருப்பார். அதனால் கூலி மிச்சமாவதுடன் துணிகளும் லாபகரமாகிறதென்று சொல்லுவார். தைக்காமல் இருந்தால் தம்முடைய கடமைகளை விட்டுவிட்டதாகத் தோன்றுமாம்.

மற்றொரு சகோதரி தம்முடைய வீட்டைக் கலைக்கூடமாக வைத்திருப்பார். அவரை எப்பொழுது சந்தித்தாலும் கையில் ஊசியும், நூலுடனும் தான் இருப்பார்.

வளரும் குழந்தைகளுக்கு விலை உயர்ந்த துணிகளை வாங்கி அதில் விதம் விதமான சரிகைப்பூ வேலை செய்து போடுவது அவசியமா? உஷ்ணம் மிகுந்த நம் நாட்டில் அவர்கள் இருக்கம் தாங்காமல் சொக்காயைப் பிய்த்துக் கொண்டு அழுகிறார்கள். நம்முடைய ஆசைக்காகக் குழந்தைகளைத் துன்புறுத்துவானேன்?



துணிகள் வாங்குவதில் சிக்கன முறை தேவைதான். சுத்தமாக, எளிமையாக இருப்பதுடன் அதைக் கடைசி வரையில் உபயோகிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். கௌரவம் வாய்ந்த ஒரு குடும்பத்தில் வயது சென்ற ஒரு அம்மாள் தம்முடைய பேத்தி, பேரக் குழந்தைகளுக்குத் தம் கையாலேயே பழைய துணிகளைத் தைத்து அடுக்குவார். அவர்களுக்குப் புதிதாக வாங்கிக் குவிக்க வசதி இருக்கிறது. ஆனாலும் வீணைகச் செய்யக் கூடாதென்ற அந்தப் பழக்கம் எல்லாரும் கற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

மிகவும் சுறுசுறுப்பும் தகுதியுமுள்ள ஒரு சகோதரி சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி புடவை உடுத்துவார். அது பிறருக்கும் திருப்தியைக் கொடுக்கிறது.

புதிய புதிய உடைகள் உடுத்துவது பெரியவர்களுக்கும், நினைவு தெரிந்த குழந்தைகளுக்கும் சந்தோஷத்தைக் கொடுக்கத்தான் செய்கிறது. பிறர் பார்த்து நன்றாக இருப்பதாகச் சொன்னால்தான் இன்னும் பெருமை. இதைப் பற்றி ஒரு பழைய ஹாஸ்யம் உண்டு. ஒரு பெண் புதுப் புடவையை உடுத்திக் கொண்டு பக்கத்து வீட்டு அம்மாள் பார்க்க வேண்டுமென நின்றாளாம். அந்த அம்மாள் கவனிக்கவே யில்லை. பொறுக்க முடியாமல் பக்கத்து வீட்டுக்குப் போய், "புதுப் புடவை உடுத்திக் கொண்டால் இப்படித் தாகம் எடுக்குமா?" எனக் கேட்டு வைத்தாள்.

இன்றைய உலகில் பெண்கள் மட்டும் துணிகளில் மோகமடைகிறார்கள் என்று சொல்ல முடியாது. ஆண்களும் விதவிதமான நிறங்களிலும், பூக்களிலும் சொக்காய்கள், கோட்டுகள் அணிகின்றனர்.

பெண்கள் பிறர் மனத்தைக் கவரும் வகையில் அணிய வேண்டாமென்று வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். சமீபத்தில் வெளி நாட்டுக்கு சென்றிருந்தாள் என் சகோதரி. அந்த நாடுகளில் அவருடைய உத்தரவைக் கேட்டும், கேட்காமலும் படம் பிடித்துக் கொண்டே இருந்தார்களாம். மரியாதை செய்யும் முறையில் உடைகள் அணியும் நம் நாட்டுச் சகோதரிகளிடம் அவர்களுக்கு அளவற்ற மதிப்பு என அறிகிறோம். அத்தகைய நம் நாட்டின் சிறந்த பண்பாட்டைச் சிறிதும் இழக்க வேண்டாம்.

இப்படிக்கு,
பூமாதேவி.



# கொள்ளை கொண்டவள்

அந்தக் கிராமாந்திர ஸ்டேஷனில் அதிக ஜனங்கள் இறங்கவில்லை. இறங்கின சிலரும் அந்த இருட்டு வேளையிலேயே ஒருவருக்கொருவர் துணையாக உடனே சென்று விட்டனர். பிளாட்பாரம் விளக்குகளை ஒவ்வொன்றாக அணைத்துக் கொண்டு வந்த பக்கிரிசாமி கடைசிக் கம்பத்தின் விளக்கடியில் ஒருத்தி இடுப்பில் சிறு கூடையுடன் கண்களைக் கசக்கிக் கொண்டு நின்று கொண்டிருப்பதைக் கண்டான். "யாரது அங்கே? டிக்கட் வாங்காமல் வந்து ஒளியறயா?" என்று அதட்டினான். "ஐயோ! அப்படியில்லே ஐயா! என்கூட வந்த அப்பா இறங்காமல் நேரே போயிட்டார், ஐயா!" என்று பதறினாள்.

"அதிருக்கட்டும். உன்னிடம் டிக்கட்டு இருக்கிறதா?" என்று அதிகாரம் வெடித்தது அவன் குரலில்.

"இரண்டு பேருடைய டிக்கட்டும் அப்பா கிட்டத்திலேதானே இருக்கு. நான் பெண்கள் பெட்டியிலே ஏறிக் கொண்டேன். அவர் பக்கத்துப் பெட்டியிலே ஏறிக் கொண்டார்" என்று கண்களில் நீர் படிய நின்றாள்.

"அம்மா, அந்தப் பாசாங்கு எல்லாம் வேண்டாம் இங்கே. ஐயாகிட்டே வந்து சொல்லிக்கோ!" என்று கண்டிப்பாகக் கூறி, அவளை, — பவுனம்மாளை — நேரே ஸ்டேஷன் மாஸ்டரிடம் அழைத்து வந்தான் பக்கிரிசாமி.

நடந்ததை ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொன்னாள் பவுனம்மாள். அவளுடைய விழிகள் நடுக் காட்டில் வழிதவறித் தவிக்கும் மானின் விழிகளைப் போல் மருண்டு நோக்கின. தென்றலில் நடுங்கும் மலராக அவள் உடல் நடுநடுங்கிக் கொண்டிருந்தது.

"உண்மையாகவா அம்மா?" என்று அவர் விசாரித்துக் கொண்டிருந்த பொழுதே, அந்த வண்டி பக்கத்து ஸ்டேஷனில் போய்ச் சேர்ந்து விட்டதற்கு அறிகுறியாக மணியடித்தது. கூடவே போனில் கூப்பிட்டு,

"இங்கே ஒரு கிழவன் இரண்டு டிக்கட்டுகளை வைத்துக் கொண்டு அழுகிறான். அவன் மகள் அங்கு இறங்கி விட்டாளாமே!" என்றார் பக்கத்தூர் ஸ்டேஷன் மாஸ்டர்.

"ஆமாம். இங்குதான் இறங்கியிருக்கிறாள். அடுத்த வண்டியிலே அந்தக் கிழவனை இங்கு வரச்சொல்லி விடுங்கள்" என்றார் இவர். அவர் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பவுனம்மாள், "என்னங்க அது?" என்றாள்.

"அடுத்த வண்டியிலே உன் அப்பா வருவார். அதுவரை இங்குதான் நீ இருக்க வேண்டும்" என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

அதற்குள் "அப்படியானால் அந்தப் பொண்ணு சொன்னது உண்மைதானா சார்?" என்று கேட்டுக் கொண்டே பக்கிரிசாமியும் வந்து விட்டான் அங்கே. "ஆமாமடா" என்று சொல்லிக் கொண்டே தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டார் ஸ்டேஷன் மாஸ்டர். அதைக் கேட்டு 'அடபாவமே?' என்று அவள் மேல் பரிதாபப் பட்டுக்கொண்டான் பக்கிரிசாமி. உடனே "இப்படி வந்து உட்கார்ந்து கொள்ளுங்க, அம்மா" என்று சற்று வெளிச்சமான இடத்தைக் காட்டினான் பவுனம்மாளுக்கு. "அடுத்த வண்டி இப்போ வந்துடுமா?" என்றாள் அவள்.

"சரியாய்ப்போச்சு! அடுத்தவண்டி காலை நாலு மணிக்கு மேலேன்னு வரும்!" என்று சொல்லிக் கொண்டே சற்றுத் தூரத்தே தன் தலையில் சுற்றிக் கொண்டிருந்த துணியை அவிழ்த்து உதறிக் கீழே விரித்துத் தலையைச் சாய்த்துப் படுத்தான்.

பிறகு அவளை ஏதேதோ விசாரித்தான். அவள் சொன்னதற்கு 'உம்' கொட்டிக் கொண்டிருந்த பொழுதே உறக்கம் அவன் கண்களைத் தழுவியது; இலேசான குறட்டை ஒலி கூடத் தலை காட்டியது. ஆனால் அதற்குள் மெயில் வண்டி 'பிளாக்' ஆகியது. உடனே ஸ்டேஷன் மாஸ்டர் குரல் கேட்கவே 'இதோ வந்து விட்டேன்' என்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தான்.

அதைக் கண்டு "ஐயோ பாவமே! நீங்கள் நன்றாய்த் தூங்கினீர்களே!" என்று பரிதாபமாய்ச் சொன்னாள் பவுனம்மாள். "உம், என்னசெய்கிறது எங்கள் பிழைப்பு அப்படி!" என்று சலிப்பாய்ச் சொல்லிக் கொண்டே, அவசரம் அவசரமாய்க் கை இறக்க ஓடினான்.

அந்த அர்த்த ராத்திரியிலே ஆடி ஓடி வேலை செய்யவே பக்கிரிசாமிக்குத் தூக்கம் நன்றாய்க் கலைந்து விட்டது. இருந்தும் உடம்புசற்று அசதியாயிருக்கவே பழையபடி சற்றுத் தலையைச் சாய்த்தான்.



சம்பந்தம்



அப்பொழுது பவுனும்பாள் ஒய்யாரமாய் உட்கார்ந்திருந்த நிழலின் எழில் அவனுக்கு எதிர்த்த சுவரில் நன்றாய்த் தெரிந்தது. சற்று நேரம் அந் நிழலையே உற்றுப் பார்த்தான் பக்கிரி. உடனே அவன் உடலில் ஒருவித குறுகுறுப்பு ஏற்பட்டது. அவன் இதயத் தடாகத்தில் இணையற்ற யௌவனம் இன்பக் குமிழிகளை எழுப்பியது.

உடனே படுக்கையை அவள் பக்கம் திருப்பிக் கொண்டு ஏதேதோ பேசத்தொடங்கினான். அவனுக்கும் நேரம் போகவேண்டுமல்லவா! ஆழ்ந்த அமைதி நிலவிய அந் நடு நிசியில் அவ்விருவரும் ஏதோ யுக யுகாந்தரமாகப் பழகினவர்கள் போல் மனம் விட்டுப் பேசி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

பக்கிரி, தூக்கத்தைக் கலைத்துக் கொள்ளத் தன் வெற்றிலைப் பாக்குப் பையை எடுத்து அவளுக்கும் இரண்டு வெற்றிலைச் சருகைக் கொடுத்தான். "வேண்டாமே. என்னிடம் வெற்றிலையும் பாக்கும் இருக்கே. சுண்ணாம்பு தான் அப்பாகிட்டே மாட்டிக் கொண்டு விட்டது" என்றாள் அவள்.

"அடடா! அப்படியா அது?" என்று வாயிலிருந்த உமிழ் நீருடன் நகைத்துக் கொண்டே அப் பையையே அவளிடம் நகர்த்தினான். உடனே அவளும் சுண்ணாம்பை யெடுத்து அவசரம் அவசரமாய்த் தடவி மடித்தாள்.



அதற்குள் காலம்கரைந்தது. திரும்பி வரும் வண்டி 'பிளாக்' காகியது. பக்கிரிசாமி எழுந்து சென்று மணியடித்தான். "இதிலேதான் அப்பா திரும்புவார், இல்லே?" என்றாள் பவுனும்பாள்.

"ஆமாம்" என்று சொல்லிக் கொண்டே பிளாட்பாரம் விளக்குகளை ஏற்ற ஓடினான். "அடாடா! நேரம் போனதே தெரியவில்லையே!" என்று அவள் கூறிக் கொண்டாள்.

சற்று நாழிகைக்குள் 'ஜிக் ஜிக்' என்று வண்டி வந்து நின்றது. "ஏய், பவுனு!" என்று அழைத்துக் கொண்டே கிழவன் வந்து இறங்கினான். "இதோ இருக்கேன், அப்பா" என்று அவளும் ஆவலாய்ச் சென்று அழைத்து வந்தாள். இருவருக்கும் மிகவும் சந்தோஷமாய்ப் போயிற்று. ஒருவருக்கொருவர் ஆர்வமாய் விசாரித்துக் கொண்டார்கள்.

அப்பனும் மகளும் பக்கத்து அறையிலிருந்த ஸ்டேஷன் மாஸ்டருக்கு வணக்கம் சொல்லித் திரும்பும் பொழுது பக்கிரிசாமி பிளாட்பாரம் விளக்குகளை அணைத்து விட்டு அவசர அவசரமாய் வந்து கொண்டிருந்தான். "உம். உம். நட. நட. இப்பொழுதே புறப்பட்டால்தான் சரியாயிருக்கும்" என்று துரிதப் படுத்தினான் கிழவன். பவுனும்பாள் சற்றுத் தயங்கினாள். அதற்குள் பக்கிரிசாமி சற்றுச் சமீபத்தில் வரவே, "போய் வரட்டுங்களா?" என்றாள் பவுனும்பாள். "இதோ வந்து விட்டேன்" என்று அருகில் ஓடி வந்து, "சரி போயிட்டு வா!" என்று அவளைப் பிரிய மனமில்லாமல் சொன்னான்.

அப்பொழுது இரவு தேய்ந்து, காலைப் பொழுது அரும்பியது. கைவிறக்கும் மேடையிலிருந்தபடியே தூரத்தில் சென்று கொண்டிருந்த பவுனும்பாளைப் பார்த்துப் பெருமூச்செறிந்தான் பக்கிரிசாமி. என்ன ஆச்சரியம்! சொல்லி வைத்தாற் போல் அதே சமயத்தில் அவளும் அதோ திரும்பிப் பார்க்கிறாளே!

அதன் பிறகு பக்கிரிசாமிக்கு ஓய்வே கிடைக்க வில்லை. ஒன்றன் பின் ஒன்றாக வண்டிகள் வந்து கொண்டிருந்தன. அதற்குக் கைஇறக்கவும்சரியாயிருந்தது அவனுக்கு.

நன்றாக விடிந்து சூரியன் உதயமான பிறகு உடனே எதிர்த்த டீக்கடைக்கு ஓடினான். சுடச்சுட ஒரு கோப்பை டீயைக் குடித்தபிறகு தான் சற்றுச் சுறுசுறுப்பு வந்தது அவனுக்கு.

அப்பொழுது எதிரில் வந்த பகல் வேலை பார்ப்பவன், கையில் வெற்றிலையை வைத்துக் கொண்டு "கொஞ்சம் சுண்ணாம்பு கொடு பக்கிரி" என்று விரலை நீட்டினான். உடனே தன் வெற்றிலை பாக்குப் பையை எடுக்க இடுப்பில் கை போட்ட பக்கிரி அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான். "சரி தான். நீயும் என்னைப் போல்தான் கண்ட இடத்தில் வைத்துவிட்டுத் தடுமாறுவாய் போலிருக்கு" என்று சொல்லிக் கொண்டே அந்தப் பகல் வேலைக்காரன் நேரே டீக்கடையைப் பார்க்கப் போய் விட்டான்.

பிறகு மெதுவாய்த் தள்ளாடி வந்து அப்படியே ஸ்டேஷன் ஜன்னலைப் பிடித்துக் கொண்டு நின்றான் பக்கிரி. வெறும் வெற்றிலைப் பாக்கு பையாயிருந்தால் பரவாயில்லையே! அதனுள் ஒரு நகைப் பொட்டணங்கூட வல்லவா யிருந்தது! இராத்திரி அந்தப்பெண் பவுனும்பாளிடம் கொடுத்த பையைத் திருப்பி வாங்கவே யில்லையே அவன்! 'அடி, கொள்ளைக்காரி. பச்சைச் சிரிப்பு சிரித்துக்கொண்டே என் பையை அடித்துக் கொண்டு போய் விட்டாயே' என்று முணுமுணுத்துக் கொண்டே அதிகாலையில் அவள் சென்ற திக்கை நோக்கி வெகு தூரம் ஓடினான். அவள் அடையாளத்தைச் சொல்லி வழியில் வந்தவர்களை யெல்லாம் விசாரித்துப் பார்த்தான். ஒரு தகவலும் கிடைக்கவில்லை. மனமுடைந்து திரும்பி விட்டான். அன்று மத்தியானம் அவனுக்குச் சாப்பிடக்கூட மனமில்லை. அவன் முகத்தில் சோகமும் ஏமாற்றமும் மிதந்து கொண்டிருந்தன.

பக்கிரிசாமிக்குத் திருமணமாகி இன்னும் சரியாய் ஒரு வருஷங்கூட ஆகவில்லை. அதற்குள் அந்த மனைவி இறந்து போய் அன்றோடு மூன்று மாதங்கள் முடிவாகின. அவனுடைய காப்பையும் கம்மலையுந்தான் — வீட்டில் வைப்பது

# குழந்தையின் குதூகலம்

ஆம். குழந்தைச் செல்வனின் குதூகலத்திற்குக் கேட்பானேன்! அவன் அப்பா எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர் வாங்கி வருகிறார். என்ன குளுமை! என்ன மென்மை! அவன் இளம் சருமத்திற்கு எவ்வளவு இதமானது!

Johnson's

TRADE MARK

## ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்

**இலவசம்** குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு வேண்டிய அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளது. சுலபமாகப் படித்து புரிந்து கொள்ளும்படியான இங்கிலீஷ் பாஷையில் எழுதப்பட்டுள்ளது.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1876, டிபார்ட்மெண்ட் 20 Q.
பம்பாய்



அத்தனை பந்தோபஸ்து இல்லை என்று அறிந்து பத்திரமாய்த் தன் வெற்றிலைப் பாக்கு பையினுள்ளேயே வைத்திருந்தான். உண்மையாகவே அவன் அந்தப் பையை யாரிடமும் கொடுப்பதும் கிடையாது. ஆனால் அன்றிரவு ஏற்பட்ட சூழ்நிலை யல்லவா அப்படி அவனைச் சதி செய்து விட்டது!

''இன்றைக்கு எப்படியும் அவசியம் எனக்கு மாற்றலுக்கு எழுதி விடுங்கள் ஸார்'' என்று சொல்லிக்கொண்டே அன்று இரவு வேலைக்கு வந்தான் பக்கிரி. ''என்னடா அப்படி அவசரம்?'' என்றார் ஸ்டேஷன் மாஸ்டர். ''பின்னை என்னங்க ஸார். இங்கு வந்த நாளிலே யிருந்து எனக்கு ஒன்றும் சரியா யில்லையே. முதலில் என் மனைவி இறந்தாள். இன்று அவள் நகையும் கொள்ளை போயிடுத்து'' என்று மிகவும் சலிப்பாய்ச் சொன்னான். ''எப்படிடா கொள்ளை போச்சு'' என்றார். அதற்குள் மற்ற ஆட்களும் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். ''உம். எங்கேயோ கைப்பிசகாய் வைத்துத் தொலைத்திருக்கேன். இப்போ காணோம்'' என்றான். நெஞ்சில் அடைத்து வரும் சோகம் அவனைப் பேசவிடாமல் தடுத்து விட்டது.

அப்பொழுதே அவன் மாற்றலுக்கு எழுதிக் கையெழுத்து வாங்கி அனுப்பி வைத்து விட்டார் ஸ்டேஷன் மாஸ்டர். கூடவே அவரும் அதற்கு அனுசரணையாய் எழுதி அனுப்பவே, அடுத்த வாரத்திற்குள்ளாகவே மாற்றல் உத்தரவு வந்து விட்டது அவனுக்கு. எல்லோருக்கும் பெரிய கும்பிடாய்ப் போட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தான் பக்கிரிசாமி.

நாட்கள் மலர்ந்து மலர்ந்து வாடி வதங்கின. எங்கு சென்றும் அவன் அந்தப் பவுனம்பாளை மறக்கவே முடியவில்லை. அவளைக் கண்டால் அப்படியே அவள் குரல்வளையைப் பிடிக்கத் தயாராயிருந்தான் பக்கிரி.

உலகத்தையே வெறுத்தான் பக்கிரி. தன் கையிலிருந்த பணத்தைத் 'தாம் தூம்' என்று செலவழித்துக் கொண்டு தன் மனம் போன போக்கில் வாழத் தொடங்கி விட்டான்.

சீக்கிரத்தில் ஊரிலிருந்த அவன் மாமா கிழவனுக்கு இவன் செய்தி எட்டியது. ஒரு நாள் ஓடோடியும் வந்தான். ரொம்பதூரம் புத்திமதி சொல்லிவிட்டுப் போனான். ''நான் சும்மா இருக்கிறேன் என்று நினைக்காதே, பக்கிரி. உனக்கொத்த பெண் தேட ஐந்தாறு இடங்களில் புலன்விட்டிருக்கேன். தெரியுமா? நான் கடுதாசி போட்டதும் உடனே லீவுக்கு எழுதி விட்டு வந்து சேரு'' என்று இரகசியமாய்ச் சொல்லி ரயிலேறினான் அவன் மாமன்.

ஊர் சென்ற மாமன் சும்மாயில்லை. சீக்கிரத்தில் எங்கேயோ ஒரு பெண் பார்த்து முடித்து விட்டான். உடனே புறப்பட்டுவரும்படி பக்கிரிசாமிக்குக் கடிதமும் வந்து விட்டது. முதலில் 'உம்; அதெல்லாம் போகவே கூடாது' என்றுதான் தீர்மானித்தான் பக்கிரி. ஆனால் அந்தக் கடிதத்தைப் படிக்கப் படிக்க அவன் மனம் மாறியது. அவசர லீவு போட்டு விட்டுப் புறப்பட்டு விட்டான்.

தலைக்கு எண்ணெய் போட்டு ஒழுங்காக வாரிக் கொண்டு, வேட்டி, ஷர்ட்டு அலங்காரத்துடன் தன் மாமாவுடன் பெண் வீட்டுக்குப் புறப்பட்டான் பக்கிரி. அது ஒரு குக்கிராமம். வயலும் வரப்புமாக நடந்து செல்ல வேண்டி யிருந்தது. நல்ல உச்சி வேளை. வெய்யில் வேறு தகித்துக் கொண்டிருந்தது.

இருவரும் மெதுவாய் அந்தக் கிராமத்தினுள் நுழைந்தார்கள். அந்தச் சமயத்தில் அங்கிருந்த மாந்தோப்புக் கப்பாலிருந்த குளத்தங்கரையில் யாரையோ பார்த்து விட்டான் பக்கிரி. ''நீங்கள் போய்க் கொண்டே இருங்கள்மாமா, இதோ வரேன்'' என்று அத் திக்கை நோக்கி ஓடினான். 'என்னடா அங்கே?' என்று கேட்டுக் கொண்டே மெதுவாய் நடக்கத் தொடங்கினார் மாமா.

பக்கிரிசாமி சந்தேகித்தது சரியாய்ப் போயிற்று. அவள் பவுனம்பாளேதான். துணியை இறுகக் கட்டிக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தபடியே அக் குளத்தில் குதிக்கப் போனாள். ''அடி கொள்ளைக்காரி! அன்று மாய்மாலச் சிரிப்புச் சிரித்து என்பையை அடித்துக் கொண்டு வந்து விட்டாயே. அதிலிருந்த நகைப் பொட்டலம் எங்கே!'' என்று கத்தினான். 'ஆ! நீங்களா!' என்று ஏறெடுத்துப் பார்த்தாள் அவள். பவுனம்பாளின் கண்கள் ஆச்சரியத்தால் அகலமாயின. ''இதோ உங்கள் நகை!'' என்று வெடுக்கெனத் தன் மடியிலிருந்து எடுத்துக் கொடுத்தாள். 'அன்று மறதியால் உங்கள் பையை என் கூடையில் போட்டு வந்தது குறித்து நான் எவ்வளவு வருத்தப்பட்டேன், தெரியுமா? பத்து நாட்களுக்கு அப்புறம் ஸ்டேஷனுக்கு வந்து உங்களை விசாரிச்சேன். நீங்கள் மாற்றலாகிப் போய் விட்டதாகச் சொன்னார்கள்!''

பக்கிரியின் மனம் அதைக் கேட்டுக் கரைந்தது. ஆனால் என்ன பயங்கரம்! அவள் ஏன் இப்படிச் செய்கிறாள்? குளத்தில் விழப் போனாள் அவள். 'என்ன காரியம் செய்கிறாய் நீ? ஏன் அப்படி!' என்று அவள் கரத்தைப் பற்றி யிழுத்தான் பக்கிரி. ''எனக்கு வேறு இடத்தில் கலியாணம் நிச்சயமா யிருக்கு. ஆதியில் உங்களை வரித்துக் கொண்ட நான் மற்றவன் தாலிக் கயிற்றுக்கு எப்படிக் கழுத்தை நீட்டுவேன்? என்னை விட்டு விடுங்கள்'' என்றாள் சோகத்துடன்.

பக்கிரியின் மனமும் பதறியது. அவள் கரத்தைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டான். அதற்குள் அவன் மாமாவே அவனைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார் அங்கே. ''என்னடா வந்த இடத்திலே வம்பு?'' என்று கோபமாய் நெருங்கினவர், அருகில் வந்ததும் அவளை உற்றுப் பார்த்து, ''விடுடா அவளை. கலியாணத்துக்கு முன் கரத்தைப் பிடித்து இழுக்கிறதாவது? இவளைத்தானேடா உனக்கு முடிச்சிருக்கேன்'' என்றார்.

''ஆ! அப்படியா!'' என்று இருவரும் ஏக சமயத்தில் கத்தினார்கள். அதே சமயத்தில் இருவர் கண்களிலும் ஆனந்த பாஷ்பம் வழிந்தது. உடனே என்றுமில்லாத வெட்கம் பவுனம்பாளை வந்து கவ்விக் கொள்ளவே விலகித் தலை குனிந்து கொண்டாள். நகைப் பொட்டணம் உடனே கைமாறியது.

அடுத்த வாரத்திலேயே பக்கிரிசாமிக்கும் பவுனம்பாளுக்கும் வெகு விமரிசையாய்த் திருமணம் நடந்தேறியது. அன்றிரவு பக்கிரிசாமியின் நகைப் பொட்டணத்தைக் கொள்ளை கொண்ட பவுனம்பாள் இன்று அவன் மனத்தையே கொள்ளை கொண்டவளானாள்.


எக்ஸிகுட்டிவ்
அல்லது காரியதரிசி
சாரங்பூரின்
கட்தி பிரிண்டட்
வாயில், ஆர்க்கண்டி புடவைகள்
ஆபீஸ் உபயோகத்திற்கேற்றது.
சோபிக்கும் புஷ்ப வர்ணங்களில், கவர்ச்சி
மிகுந்த தலைப்புடன் கூடிய இந்தப் புடவைகள்
அழகை எடுத்துக்காட்டும்.
மற்ற சாரங் துணிகள்
SANFORIZED
ஸான்பொரைஸ்டு பாப்ளின்கள், ஷர்டி
ங்குகள், ஸூட்டிங்குகள்.
கட்தி பிரிண்டட் ஆர்க்கண்டி மற்றும்
லான்.
ப்ளாக் பிரிண்ட்ஸ்.



அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்

# லாக்டோஜனில் வளருகிறான்.




"லாக்டோஜன்" ஹிந்தி புரோக்ராமைக் கேளுங்கள்
ரேடியோ஁ஸிலோன் 41 மீடர் பாண்டு

பிரதி ஞாயிறுதோறும் இரவு 7.45 மணியிலிருந்து 8 வரை
பிரதி வியாழன்தோறும் இரவு 8.30 மணியிலிருந்து 8-45 வரை

விவரங்களுக்கு எழுதவும்:-

நெஸ்ல்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்,

த. பெட்டி நெ. 396 கல்கத்தா | த. பெட்டி நெ. 315 பம்பாய் | த. பெட்டி நெ. 180 மதராஸ்

# பாலர் மலர்






















111
333
555
777
999
1111

இந்தக் கூட்டலில் உள்ள எண்களில் ஏதாவது ஒன்பது எண்களை அடித்து விடவும். எந்த ஸ்தானத்தில் உள்ள எண்ணும் இருக்கலாம். மற்ற எண்கள் அந்தந்த இடத்திலேயே இருக்கட்டும். பிறகு கூட்டினால் விடை 1111 வரவேண்டும்.

(அடுத்த இதழில் விடை)



410256

இதில் ஒரே ஒரு எண்ணை மட்டும் மாற்ற வேண்டும். அப்படிச் செய்வதால் இப்போதுள்ள தொகையில் நாலில் ஒரு பங்கு வரும். அது எப்படி?

(விடை அடுத்த இதழில்)

சாமா

பாலர் தொடர் கதை

# உண்மை ராஜா

துரோணன்

## 2. ராணிக்கு என்ன?

மகாராஜா வருவதைக் கண்டதும் பணிப் பெண்களெல்லாம் நகர்ந்து விலகி நின்றார்கள். ராணி மல்லிகாவின் உணர்வற்ற தோற்றத்தைக் கண்டதும் அரசர் திக்பிரமை கொண்டவர் போன்று ஒரு கணம் ஸ்தம்பித்து நின்று விட்டார்.

பணிப் பெண்களில் ஒருத்தி துணிச்சலுடன் ராணியின் சமீபமாக வந்து, அவளது முகத்தில் பன்னீரைத் தெளித்துச் சிறிது நேரம் விசிறத்தொடங்கினாள். அரசர் அவளது சமீபமாக உட்கார்ந்து கொண்டு இரண்டு மூன்று தடவைகள் கூப்பிட்டார். ராணி கண்களை இலேசாகத் திறந்து பார்த்து விட்டு மீண்டும் மூடிக் கொண்டாள். அப்பொழுது அரசரின் உள்ளத்தில் பெருங் குழப்பமும் பழைய ஞாபகங்களும் தோன்றின.

நாலைந்து வருஷங்களுக்கு முன், பெரிய மகாராணியான துநிகை, கொடுமையான க்ஷய நோயினால் பாதிக்கப்பட்டிருந்தாள். எவ்வளவோ வைத்தியர்கள் முயன்று பார்த்தும் அவளது நோயைக் குணப்படுத்த முடியவில்லை. முடிவாக, அவள் படுத்த படுக்கையாகவும் ஆகி விட்டாள். அப்பொழுது குழந்தையான விஜயனுக்கு ஒரு வயதேயாகியிருந்தது. அரண்மனையிலிருந்தோரெல்லாம் குழந்தையை அவளிடம் கொண்டு போகக்கூடாது என்று கூறியிருந்தனர். இந்த நிலைமையில் ஒருநாள் அவளுக்கு நோய் கடுமையாகி விட்டது. தாம் இறந்து விடப் போகிறோம் என்பதுவும் கூட அவளுக்குத் தெரிந்து விட்டது. அவள், மகாராஜாவைத் தம் சமீபமாக அழைத்து, "நான் இறந்துவிடப் போகிறேன்; குழந்தை விஜயனை நீங்கள் நன்றாகக் காப்பாற்றி, அவனுக்கே பட்டத்தை அளிக்க வேண்டும்" என்று மிகத் துயரத்துடன் வேண்டினாள். ஏனென்றால், இளைய ராணியைக் கலியாணம் செய்து கொண்டது முதல், அரசர் பட்டத்து அரசியை இலட்சியம் செய்யாமலே இருந்து வந்தார். அரசாங்கக் காரியங்களுக்கெல்லாம் கூட, அவர் இளைய ராணியையே ஆலோசனைகள் கேட்டு வந்திருந்தார். இதனால், நகர மக்களெல்லாம், இளைய ராணியின் வயிற்றில் பிறக்கப் போகும் குழந்தைக்கே அரசர் முடி சூட்டிவிடப் போகிறார் என்று பேசிக் கொண்டார்கள். இந்தச் செய்திகளினால்தான், மகாராணி மிக உருக்கத்துடன் இவ்வாறு அரசரைக் கேட்டுக் கொள்ளும்படி நேர்ந்தது.

மகாராணியின் கடைசிக் கோரிக்கையைக் கேட்ட அரசர், மனம் இளகி, அவ்வாறே செய்வதாகவும் அவளுக்கு வாக்களித்தார். அச் சமயம், இளையராணியான மல்லிகாவும் அங்கே யிருந்தாள். அரசர் வாக்குறுதி யளித்த மறுகணமே, துநிகை தன் கண்களை மிரட்சியுடன் மூடி மூடித் திறந்தாள். பின்னர் அவளது உயிர் அதிகநேரம் தாமதிக்கவில்லை.

இப்போது இளையராணியான மல்லிகாவும் அதேபோன்றிருப்பதைக் கண்டதும், அரசருக்கு மிகுந்த கவலைகள் ஏற்பட்டு விட்டன. ஆனால், சிறிது



நேரத்துக்குப் பின் இளைய ராணி கண்களை விழித்துப் பார்த்தாள். அரசர் கனிவான முகத்துடன், "உனக்கு என்ன செய்கிறது?" என்றார்.

ராணி எழுந்து உட்கார்ந்தபடியே வேறு புறத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள், அரசர் மீண்டும் நயத்துடன் கேட்கவும், ராணி, "எனக்கு ஒன்றுமில்லை; சந்தோஷத்தின் மிகுதியினால்தான் அவ்வாறு நேரிட்டது" என்றாள் வெட்கத்துடன்.

அவளுடைய பதிலினால் அரசர் ஆச்சரியமடைந்தார். பரபரப்புடன் அவளை நோக்கி, "ராணி, எந்த சந்தோஷத்தைக் கூறுகிறாய்?" என்றார்.

"சற்று முன் புலவர் சொன்ன செய்திகளை நானும் கேட்டுக் கொண்டிருந்தேன். நம் குழந்தை விஜயன் அரசாளுவான் என்று அவர் சொன்ன செய்தியே எனக்கு அளவு கடந்த ஆனந்தத்தைக் கொடுத்து விட்டது! அதன் விளைவாகவே நான் நினைவு தவறியும் விட்டேன்" என்றாள்.

அரசர் திகைப்பும், மகிழ்ச்சியும் கொண்டவராகி, அப்படியே சிலைபோல் ஸ்தம்பித்து நின்று விட்டார்!

## 3. இரு சகோதரர்கள்

மேற் சொன்ன சம்பவங்களெல்லாம் நிகழ்ந்து, இப்போது ஏறக்குறைய பதின்மூன்று வருஷங்கள் முடிவடைந்து விட்டன. ராஜகுமாரர்கள் விஜயனும், விமலனும் உருவத்தில் நன்றாகவளர்ந்து விட்டார்கள் விஜயனுக்குப் பதினெட்டு வயதும், விமலனுக்குப் பதினேழு வயதும் ஆகிவிட்டன.

விக்கிராந்தன் அவ்விருவருக்கும் கைதேர்ந்த ஒரு ஆசிரியரைக் கொண்டு கல்வி புகட்ட ஏற்பாடு செய்திருந்தார். இலக்கணம், கணக்கு, சித்திரம் முதலிய பாடங்களை அவர்கள் கற்றுக் கொண்டார்கள். இளையவனான விமலன் நன்றாகப் படிப்பதினால், ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வதிலும் ஆர்வமாக இருந்தான். ஆனால், பெரியவனான விஜயனோ பாவம், அவனுக்கு வாயினும், செவிகளினும் சக்தியில்லையல்லவா?—. ஆசிரியர் சொல்லிக் கொடுக்கும்போதெல்லாம் அவரது முகத்தையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருப்பான். அவர் சொல்வதும், படிப்பதும் அவனுக்கு ஒன்றுமே புரியாது. ஆனால், அவர் மணலில் எழுதிக் காட்டுவதையும். சுவடியில் எழுதுவதையும் மட்டிலும் மிகக் கவனத்துடன் தெரிந்துகொள்வான். கொஞ்ச காலத்தில் அவனுக்குச் சித்திரம் வரைவதில் மிகுந்த ஆசை ஏற்பட்டது. ஆசிரியர் பாடம் சொல்லிக் கொடுக்கும் வேளைகளைத் தவிர, அவன் எப்பொழுதும் சித்திரம் வரையத் தொடங்கினான். இதற்காக அவன் எங்கெங்கிருந்தோவெல்லாம் வர்ண சாயக் கட்டிகளையும், கரித்துண்டுகளையும் சேகரித்து வைத்துக் கொண்டிருந்தான்.

நாளடைவில், விஜயன் செடி கொடிகளையும் அழகான புஷ்பங்களையும், மிருகங்களையும் மனிதர்களையும் போன்று வரைவதில் கைதேர்ந்துவிட்டான்!

விமலன்—தன் அண்ணனான விஜயனிடம் எப்படியிருந்தான் தெரியுமா? அவனிடம் அளவற்ற ஆசை கொண்டிருந்தான். அண்ணனிடம் பேசித் தெரிவிக்க முடியாததையெல்லாம் ஜாடையின் மூலம் அவனுக்கு விளக்கிக் கூறுவான். உண்ணும்போதும், உறங்கும்போதும், விளையாடும்போதும் — அவன் அண்ணனைப் பிரிந்ததேயில்லை. அதிலும் அண்ணனின் சித்திரத் திறமையைக் கண்ட விமலனுக்கு, அவனிடம் ஒரு தனிமையான மதிப்பும், மரியாதையும் கூட ஏற்பட்டு விட்டன. இதைக் கண்ணுற்ற அரசரும், மந்திரி முதலானோர்களும் அளவற்ற சந்தோஷம் அடைந்தார்கள்.

இப்படியிருக்கையில்தான், அவ்விரு சகோதரர்களுக்கும் ஒரு சோதனையான காலம் ஏற்பட்டது.

ஒரு நாள் விக்கிராந்த மகாராஜா தம் சபையைக் கூட்டி, இளவரசுப் பட்டம் யாருக்குக் கட்டுவது என்பதைப் பற்றி ஆலோசனை நடத்தினார். சபையிலிருந்த சிலர் மூத்தவனான விஜயன் ஊமையாக இருப்பதால், இளையவனான விமலனுக்கே முடி சூட்ட வேண்டுமென்று கூறினார்கள். மற்றும் சிலரோ, மூத்தவனான விஜயனுக்கே இளைய பட்டம் கட்டவேண்டுமென்றும் எடுத்துக் கூறினார்கள். இந்த மாதிரியான வாக்குவாதங்கள் வெகுநேரம் வரையில் நிகழ்ந்தன. இந்தச் சமயத்தில், மகாராஜாவுக்குத் தமது பழைய ஞாபகம்





"என் சார், நம்ம ராமு தினசரி சந்தனம் செய்கிறதாகச் சொல்கிறானே! நிஜமாக இருக்குமோ?"

"நிஜம்தான் சார். அவன் வீட்டிலே எகப்பட்ட மூட்டைப்பூச்சி அடைஞ்சிருக்கு!"

களும் வந்தன. அதாவது பெரிய மகாராணிக்குத் தாம் செய்து கொடுத்த வாக்குறுதி நினைவுக்கு வரவே, அவர் சஞ்சலம் அடைந்தார்.

முடிவாக, சபையிலிருந்த பெரும்பாலோரும் புலவர் கூறியிருந்த கருத்தின் படி விஜயனுக்கே முடிசூட்ட வேண்டுமென்று ஒருமுகமாகக் கூறினார்கள். ஆனால் அரசர் அன்று எத்தகைய முடிவையும் கூறாமலே சபையைக் கலைத்து விட்டார்.

இச் செய்தியைப் பற்றி அரண்மனைக்குள்ளும், அந்தப்புரத்திலும், ஊரிலும் பலவிதங்களாகப் பேசிக்கொண்டார்கள். விமலனுக்கும் செய்திகள் தெரிந்தன. மகாராஜா தன் அண்ணனுக்கே இளவரசுப் பட்டம் சூட்டப்போகிறார் என்று அவன் கேள்விப்பட்டான். இதனால் அவன் வருத்தமடைந்தானா? அல்லது பொறாமைதான் கொண்டானா? இல்லவேயில்லை! அவன் ஆனந்தத்தினால் துள்ளிக் குதித்தான். பரிசுத்தமான இதயத்துடன் தன் அண்ணனைத் தழுவிக் கொண்டான்!

* * *

ஒரு நாள் இரவு. அமாவாசைக்கு மறுதினமாகையால் எங்கு பார்த்தாலும் ஒரே கருமையான இருள் சூழ்ந்து மிகவும் பயங்கரமாக இருந்தது. நடுநிசி யாகையால் அரண்மனைக் காவலாளிக ளெல்லாம் ஆழ்ந்த நித்திரையில் இருந்தார்கள். அன்று சேமக்கலம் அடிப்பவன் கூட ஏமாந்து போய்த் தூங்கி விட்டான்! அப்பொழுது — நான்கு உயரமான உருவங்கள் சந்தடி செய்யாமல் அரண்மனைத் தோட்டத்தின் வழியாக உள்ளே வருவதற்கு முயன்று கொண்டிருந்தன. அவைகள் நான்கும் முன்னும் பின்னும் திரும்பிப் பார்த்து ஒன்றுக்கொன்று சைகையின் மூலம் ஏதேதோ பேசிக் கொண்டன. பின்னர் அடிமேலடியாக வைத்து அரண்மனையின் உட்புறத்துக்குள்ளும் நுழைந்து விட்டன. அப்புறம் சிறிது நேரம்வரையில் எவ்விதச் சந்தடியுமில்லை.

கொஞ்ச நேரத்துக்குப் பின், உள்ளே சென்றிருந்த அந்த நான்கு உருவங்களும் மிகவும் சிரமத்துடனும், ஜாக்கிரதையுடனும் வெளியே வந்து கொண்டிருந்தன. ஏன்? அவைகளின் தலைமேல் இப்போது ஒரு அழகான படுக்கை மஞ்சம் இருந்தது. அம் மஞ்சத்தின் நாலா புறங்களிலும் மெல்லிய துணிகள் வலை போல் கட்டப் பெற்றிருந்தன. அந்த மஞ்சத்தின் உட்புறத்துக்குள்ளும் ஏதோ வொரு உருவம் படுத்திருப்பது போலிருந்தது.

அந்த நான்கு உருவங்களும், மிகப் பிரயாசையுடன் மஞ்சத்தைச் சுமந்து அரண்மனைத் தோட்டத்துக்குள் வந்து விட்டன. மெல்லிய குரல்களுடன் ஒன்றுக்கொன்று பேசிக் கொண்ட பின், அவைகளின் வேகம் அதிகரித்தது. பின்னர், ஓட்டமாக ஓடத் தொடங்கின. வழியிலிருந்த வேலிகள், புதர்கள், சுவர், காடு முரடான பாதைகள் இவைகளை யெல்லாம் அவை இலட்சியம் செய்யவில்லை. ஓட்டமாக ஓடின! முடிவில்லாமல் ஓடின!

ஏறக்குறைய – ஐந்து காத தூரம் வரையில் அவைகள் சலிப்பின்றி ஓடி வந்தன. இப்பொழுதுதான் அவைகளுக்குச் சற்றே சோர்வும் தோன்றிற்று. அவை ஒற்றுமையுடன் மஞ்சத்தைக் கீழே இறக்கி வைத்துவிட்டுத் தரையில் உட்கார்ந்தன. தூக்கி வந்த பளுவின் சிரமமும், ஓடிவந்த வேகத்தின் களைப்பும் ஒன்றாகக்கூடிச் சற்று நேரம் வரையில் அவைகளுக்கு நெடுமூச்சு வாங்கத் தொடங்கின! சிறிது நேரத்துக்குப் பின்போ — அவைகள் தைரியத்துடன் உரத்த குரலில் பேசவும் ஆரம்பித்தன. ஆமாம், அந்த நான்கு உருவங்களும் மனிதர்கள் தாம்! ஆனால், மகா நெஞ்சழுத்தமான கொலைகாரர்கள்! அவர்கள் முகங்கள் தான் எவ்வளவு பயங்கரமாக இருந்தன? (தொடரும்)

# தேநீர் கொண்டு களைப்பை வெல்லுங்கள்



சோர்வையகற்றுவதன் மூலம்,
உங்கள் சக ஊழியர்களுடன் பழகு-
வதற்குரிய சிறந்த மனோ நிலையை
உங்களிடம் உண்டாக்குவது
தேநீரின் கலை குணம் என்று.
உலக முழுவதிலும் மேலும் மேலும்
அதிக மக்கள் அறிந்து வரு-
கிறார்கள். அதனால் தேநீர்
ஒரு சாதாரண பானம் மட்டுமல்ல—
அது கடமையின் பானமாகும்.



**நான்தான் டீ — ஊழியர்களின் நண்பன்**



# கடல் கண்ட கனவு

## பதினேழாம் அத்தியாயம்

## அனல் கனிந்தது

"தரங்கவல்லியின் திருமணம் எதிர்பாராத விதத்தில் தடைப்பட்டு நின்று போய் விட்டது. செந்தமிழ் நாட்டிலிருந்து மணமகளுக்காகச் சீர்வரிசைகளோடு சீரும் சிறப்புமாகச் சென்ற குறுநில மன்னர்களுக்கும், அரசப் பெருமிதத்தோடு சென்ற பிரதானிகளுக்கும் ஏற்பட்டு விட்ட ஏமாற்றத்துக்கு ஓர் அளவே இல்லை" என்று ஆரம்பித்தார் சமணத் துறவி.

"பெரியவரே! நானே உங்களிடம் கேட்க வேண்டுமென்று நினைத்தேன். அத்தனை முன்னேற்பாடுகளுடன் வலம்புரித் தீவுக்குச் சென்றார்களே தமிழ் நாட்டுப் பிரதானிகள், அவர்களுடைய மன நிலை என்ன வாயிற்று என்று தெரிந்து கொள்ள ஆசைப்பட்டேன்!" என்றான் சித்திராங்க பூபதி.

சித்தண்ண வாசல் மலையின் உச்சியிலே இருள் படர்ந்திருந்த மை வண்ணம் மாறி, நட்சத்திரங்களின் ஒளிசாந்தமான ஒரு வெளிச்சத்தை வானத்திலிருந்து வீசிக் கொண்டிருந்தது. அந்த மங்கலான பிரகாசத்தைக் கவனித்த சமணத் துறவி புன்முறுவல் செய்து கொண்டார். எப்படியும் வானத்தில் சூரியன் உதிக்கும்வரை அந்த ஏழடிப் பட்டத்தை விட்டு நகரும் நோக்கம் அவருக்கு இல்லை. சந்திரகுடனும் ஒற்றனும் வலம்புரித் தீவிலேயிருந்த கலங்கரை விளக்கத்தில் தங்களுடைய எதிர்காலத் திட்டத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள் அல்லவா? அவர்களைச் சற்று அங்கேயே விட்டு விட்டுத் தரங்கவல்லியின் கல்யாணம் நின்றுபோன பிறகு நடந்த சம்பவங்களைத் தொடர்ந்து சொல்ல ஆரம்பித்தார் துறவி.

பாண்டிய நாட்டில் அப்பொழுது பாண்டிய அரசு மீண்டும் தலைதூக்கி ஓங்கி வளர முனைந்திருந்ததால், கோச்சடையன் ரணதீரன் என்ற பாண்டியன் தனது ராஜ்ய எல்லையை விஸ்தரிப்பதற்குப் பல திட்டங்கள் வகுத்திருந்தான். வலம்புரி அரச குமாரியை





மருமகளாக வரித்ததிலும் அவனுடைய அரசியற் பிரதானிகள் நுட்பமான பல அரசியற் காரணங்கள் இருந்ததாகப் பேசிக் கொண்டதில் எத்தனையோ உண்மையிருந்தது. அந்தத் திருமணத்துக்குத் தென் பாண்டி நாட்டு மண்டலாதிபதிகள் பலர் அத்தனை கோலாகலத்தோடு சென்றிருந்ததில் பல நோக்கங்கள் இருந்தன. பாண்டிய அரசனும் தன்னுடைய குறுநில மன்னர்களையெல்லாம் ஒருமித்து வரும்படி ஏற்பாடு செய்து அவர்கள் அனைவரையும் அந்தத் திருமண விழாவுக்கு அழைத்துச் சென்றதற்குக் காரணமும், ராஜ்ய விஸ்தரிப்பு நோக்கத்தான். பல்லவ சாம்ராஜ்யத்துக்கு எதிராகச் சோழர்களையும், சேரர்களையும், தமிழ் நாட்டு வேளிர்களையும், முத்தரையர்களையும் ஒன்று சேர்த்து ஓர் ஐக்கியப் படை திரட்ட வேண்டும் என்றால் அதற்கு மையமாக ஒரு தளம் பாண்டியனுக்கு அவசியமாக இருந்தது. கடலுக்கு அப்பால் இருந்த வலம்புரித் தீவு இந்த நோக்கங்கள் அனைத்துக்கும் பொருத்தமான இடம் என்று தீர்மானித்துத்தான், அந்தத் திருமண உறவைப் பற்றி ஏதேதோ கனவுகள் கண்டான் பாண்டிய மன்னன். அப்படியிருக்கும் போது இப்பொழுது எதிர்பாராத விதத்தில் அந்தத் திருமண விழாவை நிறுத்தும்படி வலம்புரித் தீவின் அரசன் கட்டளையிட்டதும் அவனுக்கு ஏற்பட்ட ஆத்திரத்தைச் சொல்லவும் வேண்டுமா?

திருமண விழா நிகழ்ச்சிகள் முறிந்து போய் அரை நாழிகை நேரத்துக் கெல்லாம், வலம்புரி அரச மாளிகையின் 'திருவோலக்கம்' என்ற அரச மண்டபத்தில் பாண்டிய மன்னனும் வலம்புரித் தீவின் பேரரசனும் சந்தித்தார்கள்.

"பாண்டியர் திலகமே! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். இன்று

திருமண விழாவின் போது நடந்த சம்பவம் என் உள்ளத்தில் விவரிக்க முடியாத பல வேதனை உணர்ச்சிகளை உண்டாக்கி யிருக்கிறது. எனக்கு அறிவு தெரிந்தது முதல் இது வரை இம்மாதிரி தெய்வ கோபம் ஆவேசத் தோடு கேட்டதில்லை. எங்கள் குலத்துக் கும், இந்த நாட்டு மக்களுக்கும், இந்த வலம்புரித் தீவின் வம்ச பரம்பரைக் குமே ஜீவாதாரமான புனிதப் பொருள் அந்தப் பேரியாழ்தான். எங்களோடு நாங்கள் வழிபடுகிற தெய்வமாகிய வலம்புரியம்மன் நேருக்கு நேரே பேசு வது அந்தப் பேரியாழின் மூலமாகத் தான். அப்படிப்பட்ட புனிதமான யாழில் இன்று அபஸ்வரம் பேசி விட்டது. இந்த மாக எந்தக் கேட் டையோ அறிவுறுத்துகிறது. ஏதோ ஒரு பெரிய விபத்து இந்தத் தீவுக்கு வரப் போகிறது, நாங்கள் கவனமாக இருக்க வேண்டும் என்று எங்கள் குல தெய்வம் எங்களுக்கு எடுத்துச் சொல் லுகிறது. என் புத்தி குழம்பி விட்டது. சுப எண்ணங்களோடு ஆரம்பித்த இத் திருமணத் திருவிழாவை எங்கள் தேவ தைகள் அங்கீகரிப்பதற்கு மறுத்து விட்டன. ஆகையினால்—''

''போதும்! வலம்புரி மன்னவரே! உமது பேச்சை இதற்கு மேல் கேட்க நான் விரும்ப வில்லை. அபஸ்வரம் விழுந்திருப்பது யாழிலில்லை. உம்முடைய உள்ளத்திலேதான். அபஸ்வரத்தினால் காது கிழிபட்டது உங்கள் தேவதைகளுக்கல்ல, உமது வார்த்தைகளைக் கேட்கும் எனக்கும் என்னோடு வந்திருக்கும் இந்த நாற்றுக்கணக்கான பிரதானிகளுக்குந்தான்!''

இப்படிச் சொன்ன போது பாண்டிய மன்னனுடைய கண்களிலிருந்து தீப் பொறி பறந்தது. இதைக் கவனித்ததும், வலம்புரி மன்னன் துணுக்குற்றான்.

''பாண்டிய மன்னா! கருணை கூர்ந்து சீற்றத்தைத் தணித்துக் கொண்டு என் பேச்சைக் கேளுங்கள். உங்களையோ உங்களுடைய பிரதானிகளையோ அவமானப் படுத்த வேண்டும் என்ற நோக்கம் எனக்கு அணுவளவும் இருந்ததில்லை. இருக்கப் போவதும் இல்லை. பாண்டிய மன்னன் இடை மறித்தான். மீசை துடித்தது. அவன் உதடுகள் படபடத் தன. சொன்னான்:

''வலம்புரி மன்னனே! உம்முடைய குலத்தோடு நாம் உறவு கொள்ள நினைத்ததை நீர் ஒரு பாக்கியமாகக் கருதுவீர் என்றே எதிர்பார்த்தேன். அப்படியிருக்க அதைத் தட்டிக் கழிப்ப தற்கு இப்படி ஒரு மூடத்தனமான காரணத்தை வலிந்து தேடுகிறீர் என் பதைப் பார்க்கும் போது, எனக்கு வருத்தம் ஏற்படவில்லை. உம்முடைய அறியாமையை நோக்கி அனுதாபப்படு கிறேன். என்றாலும் ஒரே ஒரு விஷயம் மட்டும் என்னைத் துன்பப்படுத்து கிறது. பரம்பரை பரம் பரையாக நம்மோடு மண உறவு கொண்டுள்ள பழையாறை மன்னர்களை விட்டு விட்டு, உமது குலத்தில் பெண் வாங்க எண்ணி இத்தனை ஏற்பாடுகளோடு வந்து விட்டேனே என்று எண்ணும் போது, என்னுடைய அறியாமையை நோக்



கித்தான் நான் வேதனைப் படுகிறேன். வழி வழியாகப் பெருமையிலே வாழ்ந்து வந்துள்ள எங்கள் பாண்டிய குலத்துக்கு நீர் இப்படி ஒரு பெரிய அவமானத்தை விளைத்து விட்டது, மன்னிக்க முடியாத ஒரு பெருங் குற்றம்.''

இவ்வாறு கூறினான் மதுரை மன்னன். வலம்புரிப் பேரரசனுடைய உள்ளத்தில் இந்த வார்த்தைகள் சுருக்கென்று தைத்து விட்டன.

''கூடல் மாநகரின் தனிப் பெரும் வேந்தே! தயைசெய்து அப்படியெல்லாம் பேசாதீர்கள். எத்தனையோ பெரிய சிறப்பு என்னையும் எனது புதல்வியையும் நாடிக் கடல் கடந்து வந்தது. ஆனால் எங்களுக்குக் கொடுத்து வைக்க வில்லை. பாண்டியர்களோடு உறவு கொள்ளுவது என்றால் அது எத்தனை பெரும் பாக்கியம் என்பதை நான் நன்றாக உணர்வேன். எனது முன்னோர்கள் அனைவரும் தங்கள் குலத்தின் தொண்டர்கள். படைப்புக் காலம் தொட்டு மேம்பட்டு வரும் உங்கள் குலத்தின் பெருமையை எனது முன்னோர்கள் எத்தனையோ முறை எத்தனையோ விதத்தில் வர்ணித்துச் சொல்லக் கேட்டிருக்கிறேன். என்னைத் தவறாக எண்ணாதீர்கள். வால்மீகி மகாகவியின் ராமாயணத்தில் பாண்டிய வேந்தரது தலைநகரைப் பற்றிய வர்ணனையைப் படிக்கும் போதெல்லாம் எங்கள் குல முதல்வர்கள் உங்களுடைய நாட்டின் திக்கு நோக்கிக் கரங் கூப்பி வணங்குவார்கள். எனவே தங்கள் குலத்தினிடத்தில் எனக்குள்ள மதிப்பு என்னுடைய இரத்தத்திலே உள்ளது. அதைப் புரிந்து கொள்ளாமல் சீற்றம் கொண்டு பேசுவது என்னை வருத்துகிறது!'' என்றான் வலம்புரி அரசன்.

பாண்டிய மன்னனோடு இருந்த பிரதானிகள் வெகுண்டார்கள். தமிழ் நாட்டுக் குறுநில மன்னர்கள் போர்ப் படைகள் அணிவகுத்து நிற்பதுபோல் சீற்றத்தோடு எழுந்து நின்றார்கள். நிலைமையின் சிக்கலை மிக நன்றாகப் புரிந்து கொண்ட வலம்புரித் தீவின் நிமித்திகர் தலைவரான ஒரு வயோதிகர் பாண்டிய மன்னனுக்கு எதிரே வந்து நின்று பேச ஆரம்பித்தார்.

''தமிழ் மன்னனே! உங்கள் சீற்றம் நியாயத்தோடு கூடிய சீற்றம். உங்களுடைய உணர்ச்சிகள் அனைத்தும் இயல்பானவை. அவற்றை நன்றாகப் புரிந்து கொண்டு விட்டேன். ஆனாலும் ஒரு முக்கிய விஷயத்தைத் தங்களுக்கு நினைவூட்ட வேண்டியது எனது கடமை. இன்று காலை மண விழாவிலே கேட்ட தெய்வக் குரல் இந்த வலம்புரி அரச குலத்துக்கு மட்டுமில்லை, தங்கள் குலத்தின் நன்மைக்காகவுமே எழுந்த ஓர் அறிவிப்பு. நம்முடைய சாதாரண அறிவுக்கும், நமது புறப்புலன்களுக்கும் எட்டாத ஓர் எதிர்காலத்தை நமக்குக் கண்டு சொல்லும் ஓர் பேரறிவின் குரல் அது. நீங்கள் எல்லாரும் தெய்வ உணர்விலே ஊன்றியவர்கள். அரசர்க்கு உரிய பரிமேதம் என்று சொல்லப்படும் வேள்வியையும் அது போன்ற இன்னும் பல யாகங்களையும் செய்து **பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி** என்று சிறப்புப் பெயர் பெற்றவர் உங்களுடைய முன்னோர்! தெய்வமே மனித வடிவில் வந்து அரசாண்ட நாடு உங்கள் நாடு. கண்ணுக்குத் தெரிகிறதை நம்புவதற்குச் சாதாரண அறிவு போதும். கண்ணுக்குத் தெரியாததை உய்த்து உணர்வதற்குத்தான் பகுத்தறிவு வேண்டும். அத்தகைய பகுத்தறிவோடு கூடிய பெருங் குலத்தில், யாகமும் தெய்வ வேள்விகளும் செய்த பரம்பரையில் உதித்துள்ள நீங்கள் இந்த ஏழை நிமித்திகனின் சொல்லைக் கேளுங்கள். தெய்வ கோபத்துக்கு மத்தியிலே இந்தத் திருமணத்தை நடத்த வேண்டாம். இதை நிறுத்தி விடுவதே சரியான காரியம்!''

இதன் பிறகு பிரதானிகளின் மத்தியிலே ஏதேதோ சர்ச்சைகள் நிகழ்ந்தன. வலம்புரி அரசனுடைய பேச்சிலே பாண்டியப் பிரதானிகளுக்குக் கசப்பு ஏற்பட்டது. ஆனால் அதே சமயம் அவனுடைய வார்த்தைகளில் ஏமாற்றுகிற நோக்கமோ, விஷமத்தோடு கூடிய சூழ்ச்சியோ ஏதும் இருப்பதாகப்படவில்லை. பேரியாழில் அத்தகைய ஒரு தீவிரமான தெய்வ விசுவாசம் அவனுக்கிருந்ததால், அப்படிப் பேசுகிறான் என்பது எல்லாருக்கும் தெரிந்தது. இதனால் தர்க்கத்துக்கு இடம் இல்லை. என்றாலும் பாண்டிய மன்னனின் மனத்தில் நெருப்பு அனல் விட்டு எரிந்தது.

திருமணம் நடக்க வேண்டிய தினத்தில், மணமகனும் அவனோடு வந்திருந்த அத்தனை பிரதானிகளும் தங்கள் நாட்டை நோக்கிப் புறப்பட்டார்கள்.

''திருமணம் நின்று போனதால், நமக்குள் நட்பே நின்று போய் விட்டதாக எண்ணக் கூடாது. எங்கள் வலம்புரித் தீவு பாண்டிய ராஜ்யத்தின் கருணைக்குப் பாத்திரமான ஒரு குறுநிலம். இங்கே எங்களுடைய விருந்தினர்களாகத் தங்கிப் போக வேண்டும்!'' என்று மன்றாடினான் வலம்புரி அரசன். ஆனால் யாருக்கும் அங்கே நிலை கொள்ளவில்லை.

சீர் வரிசைகளோடு, குதூகலமாக வந்த மரக்கலங்கள் சோகப் போர்வை

# மகத்தான விலைக் குறைவு

மிக நவீனமான 1956-ம் வருஷ ஸ்பெஷல் மாடல்கள். மிக மிக நேர்த்தியான மெஷின் & டிசைன் ஒவ்வொன்றும் 3 வருஷங்கள் உத்திரவாதம்

இலவசம்: ஏதாவது மூன்று கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு ஒரு அலாரம் டயம்பீஸும், ஒரு கடிகார ஆர்டருக்கு ஒரு கோல்டு கேப் பவுண்டன் பேனாவும் இனாம்.



நெ. 1181 வாட்டர் புரூப் 10½ சைஸ்

| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 36/- |
| 17 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 56/- |
| 21 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 64/- |



நெ. 1183 வளைவு வடிவம் 7½ சைஸ்

| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் பிளேட் க்ரோம் | 32/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 38/- |
| 17 | ஜூவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 63/- |



நெ. 1185 தட்டை வடிவம் 10½ சைஸ்

| | | |
|---|---|---|
| 5 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 19/- |
| 5 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு C/S | 21/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 28/- |
| 17 | ஜூவல்ஸ் க்ரோம் கேஸ் | 37/- |
| 17 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 42/- |



நெ. 1186 லேடீஸ் 5½ சைஸ்

| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் பின் லீவர் R/G | 45/- |
| 17 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 48/- |
| 17 | ஜூவல்ஸ் ,, (20 மைக்ரோன்) | 65/- |
| 21 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



நெ. 1182 வாட்டர் புரூப் 8½ சைஸ்

| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 40/- |
| 17 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 44/- |
| 17 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 54/- |
| 21 | ஜூவல்ஸ் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | 58/- |
| 21 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 68/- |



நெ. 1184 டோனோ வடிவம் 7½ சைஸ்

| | | |
|---|---|---|
| 15 | ஜூவல்ஸ் பிளேட் க்ரோம் | 34/- |
| 15 | ஜூவல்ஸ் ரோல்டு கோல்டு | 40/- |
| 17 | ஜூவல்ஸ் ரோ. கோ. (லீவர்) | 65/- |



பாக்கெட் கடிகாரம்

ஜூவல் உள்ளது 18/- — 15 ஜூவல்ஸ் 27/-

அலாரம் டைம்பீஸ்

| | | |
|---|---|---|
| 3" டயல் அலாரம் | ... | 15/- |
| ஸ்மித் அலாரம் 4½" டயல் | ... | 18/- |
| உயர்ரக அலாரம் 5" டயல் | ... | 22/- |
| டபுள் பெல் 5" டயல் | ... | 18/- |

**PIONEER WATCH CO.,** POST BOX NO. 11428, CALCUTTA-6

போர்த்துக் கொண்டு ஒரே துக்கத்துடன் கடலிலே திரும்பி மிதந்தன. அந்தக் காட்சி பரிதாபமாக இருந்தது. பாண்டிய மன்னன் இரவெல்லாம் நித்திரையின்றிக் கழித்தவன் இப்பொழுது மரக்கலத்தின் மேல் தளத்துக்கு நடந்து வந்து பின்னால் திரும்பிப் பார்த்தான். தூரத்தில் வலம்புரித் தீவு ஒரு சிறு பொட்டுப் போல் தெரிந்தது. அந்தப் பொட்டின் மேல் வலம்புரித் தீவின் கலங்கரை விளக்கம் ஒரு சிறு குச்சியை நட்ட வைத்து நிறுத்தியது போல் தெரிந்தது. சூரியனுடைய பிரகாசத்துக்கு முன்னால் அந்தக் கலங்கரை விளக்கின் ஒளி எங்கே! இதைப் பார்த்ததும் பாண்டிய மன்னன் தனது தலைமை அமைச்சரை அழைத்தான்.

"பாரும் அதோ! சூரியனுக்கு முன்னால் அந்தக் கலங்கரை விளக்கைப் பாரும்!" என்றான் பாண்டியன், அமைச்சரைப் பார்த்து! மன்னனின் கருத்தைப் புரிந்து கொண்ட அமைச்சர் மௌனமாகப் பெருமூச்சு விட்டார். பாண்டிய மன்னனும் பெருமூச்சு விட்டான். அந்த மூச்சில் ஆற்றொணாத கோபம் அனல் விட்டது. அந்த அனல் நெருப்பாகக் கனிவதற்கு ஒரு வருஷம் பிடித்தது. பாண்டியன் அன்று மரக்கலத்திலே நின்றவாறு சீற்றத்தோடு வெளியிட்ட பெருமூச்சு, பெரும் புயலாகக் கிளம்பி வலம்புரித் தீவிலே சுழன்று வீசுவதற்கு ஓர் ஆண்டு ஆயிற்று! பேரியாழிலே கேட்ட அபஸ்வரம், பாண்டியனுடைய சீற்றமாக எதிரொலித்து வலம்புரித் தீவிலே வந்து பேரிடியாக விழுவதற்கு, ஆம், ஒரு வருஷ காலம் ஆயிற்று! அந்த ஒரு வருஷ காலமும் யாழ்ப்பாணருடைய வீட்டிலே சந்திரசூடனுடைய வாழ்வில் தினமும் அனற் பெருமூச்சும், பெரும் புயலும், பேரிடியுமாகத்தான் கழிந்தது. நீலமேக யாழ்ப்பாணரின் முகத்தில் தோன்றிய கடைசி மின்னல், அவருடைய வழித் தோன்றலான சாருகேசியின் வயிற்றிலே வளர்ந்து, அவள் பெற்றெடுத்த அந்தத் தங்கப் பதுமை போன்ற பெண் குழந்தையின் முகத்தில் புன்னகையாகத் தவழ்ந்து, சந்திரசூடனுடைய உள்ளத்திலே பெரும் நெருப்பாக வீசியது. அந்த வேளையிலேதான் கடற்கரையிலே ஒற்றனுடைய சந்திப்பு ஏற்பட்டு, சந்திரசூடன் அவனோடு நடந்து சென்று கலங்கரை விளக்கத்தின் அடியிலே மணற்பரப்பில் அமர்ந்தான்!

## பதினெட்டாம் அத்தியாயம்
# மரக்கல ஓசை!

"தம்பீ! நான் இந்தத் தீவை விட்டுப் புறப்படுவதற்குச் சித்தமாக இருக்கிறேன் என்பதை நீ தெரிந்து கொண்டதில் நான் வியப்படையவில்லை. ராஜசிம்ம மகாராஜனுடைய ஒற்றர்களின் சாமர்த்தியம் எனக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் மேலும் கேட்கிறேன், நான் யாழில்லாமல் வந்தால் நிச்சயம் தண்டனை கிடையாதா?"

"சந்திர சூடரே! யாழில்லாமல் நீங்கள் மட்டும் இங்கிருந்து புறப்பட வேண்டிய அவசியம் எப்படி நேர்ந்தது? தாங்கள் தனியாகப் புறப்படுவதற்கு என்ன அவசியம் வந்தது? தங்களையும் தங்களுடைய...."

இதற்குமேல் ஒற்றனைப் பேசவிடாமல் மறித்தான் சந்திரசூடன்.

"தம்பீ! இதுவரை நீ பேசிய விஷயங்கள் எல்லாம் சரி. ஏனென்றால், அவை யாவும் உன்னைப் போன்ற புத்திசாலிகளால் ஊகித்து அறியக்கூடியவை: ஆனால் இதற்கு மேற்பட்ட விஷயங்கள் அப்படியில்லை. அவை பிறரால் ஊகிக்க முடியாதவை. எனக்கே நிர்ணயித்து முடிவுகட்ட முடியாத நிலையில் இருந்தவை.. தம்பீ! நம்மைப் போன்ற அரசப் பணியாளர்களின் வாழ்வில் சில சமயங்களில் விபரீதமான பிணக்குகள் ஏற்படுவது இயல்பு. தேசம் முக்கியமா, குடும்பம் முக்கியமா, தாய் நாட்டின் நன்மை முக்கியமா, சொந்தக் கடமைகள் முக்கியமா, அரசனின் கட்டளையை நிறைவேற்றுவதா அல்லது குடும்ப பாரத்தைச் சுமப்பதா என்று இரண்டு சிந்தனைகள் ஒன்றோடொன்று முரண்பட்டு மோதுகிற சமயங்கள் நமது வாழ்வில் ஏற்படுவது இயல்பு. இந்தச் சமயங்களிலேதான் தியாகம் என்ற உயர்ந்த நோக்கம் மேலெழுந்து வெற்றி பெற வேண்டும். அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பம் எனக்கு இப்பொழுது நேர்ந்திருக்கிறது!" என்றான் சந்திரசூடன்.

"சந்திரசூடரே! உங்கள் வாழ்வில் ஏதோ ஒரு சம்பவம் உங்கள் உள்ளத்தைக் குழப்பியடிக்கிறது என்பதை நான் நன்றாக ஊகித்து உணர்கிறேன். சில இரவுகளில் உங்களுக்கு உறக்கம் இல்லாமல், வீட்டிலே இருப்புக் கொள்ளாமல் கொந்தளிக்கிற உள்ளத்தோடு நீங்கள் இந்தக் கடலின் மணற் பரப்பிலே படபடப்போடு நடந்து செல்வதைக் கண்டிருக்கிறேன். நீலமேக யாழ்ப்

பாணரின் மரணம் உங்கள் மனத்தின் சாந்தத்தைக் கெடுத்து விட்டது என்று அறிகிறேன். அந்த முதியவரின் மரணத்துக்குக் காரணமாக அமைந்த யாழிசையின் முரண்பாடும், அதைத் தொடர்ந்து தரங்கவல்லியின் திருமணம் நின்று போன விபரீதமும், அது காரணமாகப் பாண்டிய மன்னன் பழி வாங்கும் நோக்கத்தோடு மரக்கலத்திலே திரும்பிச் சென்றிருப்பதும் உங்கள் இதயத்தை வேதனைப் படுத்தவே செய்யும். அது இயல்புதான். என்றாலும் இரவு நேரங்களில் வீட்டில் இருப்பதற்குக்கூட மனம் ஒப்பாத நீங்கள் ஏன் அடிக்கடி ஏகாந்தமாக இந்தக் கடலின் கரையிலே நடக்கிறீர்கள் என்பதை யோசித்து யோசித்துப் பார்த்திருக்கிறேன். என்னுடைய ஊகத்துக்கு அடைபடவில்லை அதன் காரணம்!'' என்றான் ஒற்றன்.

சந்திரசூடன் சொன்னான்: ''தம்பி! இந்த உள்ளம் வலம்புரித் தீவின் புனிதமான பாணர் குடும்பத்துக்கு ஒரு பெரும் பாபத்தைச் செய்து விட்டது. அந்தப் பாபத்திலிருந்து விடுபட வேண்டும் என்றால் இன்னொரு பாபத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது நான்! இதற்கு அஞ்சி இந்த இரண்டாவது பாபத்தைச் செய்யாமல் இங்கேயே தங்கி விடலாம் என்றால், என் குழந்தையின் முகத்திலே நெளிகிற அந்த மின்னற் சிரிப்பு என்னை நாளும் பொழுதும் அனலாகச் சுடுகிறது.''

இப்படிச் சொன்னபோது சந்திரசூடனின் விழிகள் கலங்கின.

''தம்பி! இந்தப் பெரும் சிக்கலான பிரச்னைக்குக் கடந்த பல தினங்களாக முடிவு காண முடியாமல் தவித்தேன். கடைசியில் இப்பொழுது ஒரு முடிவுக்கு வந்து விட்டேன். என்னுடைய அரசனின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக இப்பொழுது ஒரு பெரிய பாபத்தைச் செய்யப் போகிறேன். என்றாலும் மனத்தில் ஒரு திருப்தி இருக்கிறது. அரசனின் கட்டளையை நிறைவேற்றுகிறோம் என்ற திருப்திதான் அது!''

இவ்வாறு சொன்னான் சந்திரசூடன். அவனுடைய உட்கருத்தைப் புரிந்து கொண்டு விட்ட ஒற்றன் கேட்டான்:

''சந்திரசூடரே! நான் நினைத்தேன், உங்களோடு தமிழ் நாட்டுக்குப் பேரியாழும் இரண்டு ஜீவன்களும் ஒன்றாக மரக்கலத்தில் வரப்போவதாக! ஆனால் நீங்கள் சொல்வதைப் பார்த்தால்—''

''தம்பி! என்னுடைய உள்ளம் ஒரு வகையாகத் தீர்மானத்துக்கு வந்திருக்கிறது. உன்னோடு இதற்குமேலே பேசி

ணுல் என் தீர்மானத்தைக் குழப்பி யடித்து விடுவாய் என்று பயப்படு கிறேன்'' என்றான் சந்திரசூடன்.

ஒற்றன் சற்று நேரம் மௌனமாக இருந்தான். இப்பொழுது அவனுடைய உள்ளம் குழம்ப ஆரம்பித்தது.

''சந்திரசூடரே! உங்களுடைய உள்ளத்தின் வேதனையை அதிகப்படுத்த நான் விரும்பவில்லை. ஆகையினுல் நீங்கள் என்ன முடிவு செய்கிறீர்களோ அதைக் கேட்டுக் கொள்ளுகிறேன். சொல்லுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்? நான் இந்தத் தீவுக்கு வந்து சேர உபயோகித்த சிறிய மரக்கலம் ஒன்று, நிலவுப் பாறைக்குச் சற்றுத் தூரத்தில் இரகசியமான ஒரு வட்டத்திலே கட்டப் பட்டு மிதந்து கொண்டிருக்கிறது. என்



னேடு சகாயத்துக்கு வந்த துணைவர்களும் என் தீர்மானத்துக்காகக் காத்திருக்கிருர்கள். ஆகவே தங்கள் கருத்தைச் சொல்லுங்கள். அதன்படி நடக்கிறேன்!'' என்ருன் ஒற்றன்.

சந்திரசூடன் மணற் பரப்பிலிருந்து எழுந்தான். ''தம்பி! என்னேடு இந்தக் கரையோரமாகவே நடந்து வா. நிலவுப் பாறைக்கு அப்பால் எங்கோ ஒரு வட்டம் என்று சொன்னுயே, அதை எனக்குக் காண்பித்து விடு!''

இப்படிச் சொல்லிக் கொண்டே நடந்தான் சந்திரசூடன். ஒற்றன் கேட்டான்: ''சந்திரசூடரே! நீங்கள் சொல்வது சரி. ஆனல் இப்பொழுதே அந்த வட்டத்துக்குச் சென்ருல் என்ன பயன்? என்னேடு வந்துள்ள துணைவர்கள் எல்லாரும் ஏதேதோ வேடத்தில் தனித் தனியாகப்பிரிந்து விடுதிகளிலும், சத்திரங்களிலும், புறத் திண்ணைகளிலும் அல்லவா இருக்கிருர்கள்? அவர்களை யெல்லாம் ஒருமித்து அழைத்துக் கொண்டு வரவேண்டாமா நான்?''

''என்னேடு நடந்து வா, தம்பீ! முதலில் அந்த இரகசிய வட்டத்தையும், நீ வந்து சேர்ந்திருக்கிற அந்த மரக்கலத்தையும் காட்டு. அதன் பிறகு என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறேன்!'' என்ருன் சந்திரசூடன்.

பல்லவ ஒற்றனும் சந்திரசூடனும் கடலின் கரையோரமாக வந்து மேலே நடந்தார்கள். நிலவுப் பாறையின் எல்லைகளைத் தாண்டி நெடுந்தூரம் நடந்து சென்றதும், குகைகளும் சிறு சிறு பாறைகளுமாகப் படர்ந்திருந்த ஒரு வட்டத்துக்கு வந்து சேர்ந்தார்கள் இருவரும். அங்கே சற்றுத் தொலைவில் ஒரு பாறையிலே இரும்பு முளைகளில் சங்கிலியினுல் கட்டப்பட்டிருந்த ஒரு சிறு மரக்கலம் மிதந்து கொண்டிருந்தது.

''வலம்புரித் தீவின் மரக்கலத்தைப் போலவே இருக்கிறதே இது! அந்நியர்களுடையது என்று யாருமே கண்டு பிடிக்க முடியாத முறையிலல்லவா தோற்றம் அளிக்கிறது! பெரிய நிபுணன் தான் தம்பீ நீ! சரி; நாளை இரவு இதே நேரத்தில் இங்கே நீயும் உன்னுடைய துணைவர்களும் இங்கிருந்து புறப்படுவதற்குச் சித்தமாக இருங்கள்! நான் இந்த இடத்துக்கு வந்து விடுகிறேன்!'' என்ருன் சந்திரசூடன்.

''பேரியாழ்?'' என்று கேட்டான் ஒற்றன், திகைப்போடு.

''தம்பீ! என் கடமையை எனக்கு நீ நினைவுபடுத்துகிருயா! நன்ருயிருக்கிறதே உன் பேச்சு! அதை யெல்லாம் பற்றிக் கவலைப்படாதே தம்பீ! நாளை இரவு இதே நேரத்தில் எப்படி எந்தக் கோலத்தில் எந்தத் துணைகளோடு வருகிறேன் என்று காத்திருந்து பார்!''

இப்படிச் சொல்லிவிட்டுக் கை கூப்பினுன் சந்திரசூடன். ஒற்றனும் மிகுந்த பணிவோடு தங்கள் அரச மன்றத்துத் தலைமை மந்திரியின் குமாரனை சந்திரசூடனுக்கு மிக்க மரியாதையோடு வணக்கம் செலுத்தினுன். அப்போது கடலின் அலைகளிலே ஏதோ ''கலகல'' என்று ஓர் இரைச்சல் கேட்டது. இருவரும் கூர்ந்து கேட்டார்கள். சந்திரசூடன் கடலின்பரப்பை விழிகளால் நன்ருக ஆராய்ந்து பார்த்தான். ஏதோஒரு சிறிய ஓடம் தொலைவிலிருந்து கரையோரமாக வந்து விட்டுப் பிறகு மீண்டும் கடலுக்குள்ளே செல்லுவது தெரிந்தது!

(தொடரும்)

# மட்டரக ப்ளேடுகளில் பணத்தை வீணாக்காதீர்கள்



ஒரு முறை முகக்ஷவரம் செயதபின்னர் காணப் படும் மட்டரக ப்ளேடின் உடைபட்ட நுனி



பல முறை முகக்ஷவரம் செய்துகொண்ட பின் காணப்படும் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடின் நுனி

பலர் மட்டரக ப்ளேடுகளை வாங்கி பணத்தை மிச்சப்படுத்தப்பார்க்கின்றனர். ஆனால் இப்ளேடுகள் ஒன்று அல்லது இரண்டு முறை முகக்ஷவரம் செய்தபின் கூர்மை இழந்து பிரயோஜனமில்லாமல் எறிந்து விட வேண்டியனவாக காணப்படும். புத்திசாலிகள் கொஞ்சம் அதிகப் பணம் செலவு செய்ய பால் மாறாமல் ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளையே வாங்குகிறார்கள். நாளடைவில் அவர்களுக்கு பணமும் மிச்சமாகிறது. எப்படியெனில் ஒவ்வொரு ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடும் பலமுறை முகக்ஷவரம் செய்து கொள்ள அவ்வளவு கூர்மையாக இருக்கிறது.

# 7 o'clock




**BLADES**

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்




"இது என்ன? பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் வியாசம் எழுதக் கொடுக்கும் தலைப்பைப் போல் இருக்கிறதே! இது என்ன படம்!" என்று சிலர் யோசிக்கலாம். தலைப்பைப் பார்த்தால் அப்படித்தான் நினைக்கத் தோன்றும். புரட்சி எதுவும் இல்லாத தலைப்பா யிருந்தாலும், திரைக் கதையில் ஒரு புரட்சி, ஒரு மாறுதல் காண முடியா விட்டாலும், சினிமா நடிகர்களுக்குள் ஒரு புரட்சி, ஒரு மாறுதல் காண முடிந்தது.

திரைப் படத்தில் வில்லனாகத் தோன்றி, சினிமாப் பாத்திரங்களை யெல்லாம் கொடுமைப் படுத்தி வந்த டி. எஸ். பாலையா, ராஜ உடைகளையும், கத்தி கேடயங்களையும் அகற்றிவிட்டு, மீசையைத் தகர்த்து எறிந்துவிட்டு, கோட்டும் குல்லாவும் அணிந்து ஒரு சாதாரண வக்கீல் குமாஸ்தாவாக நடிக்கிறார். பல படங்களில் பலர் குடியைக் கெடுத்து வந்த பாலையாவுக்கு இந்தப் படத்தில் குடியும் குடித்தனமுமாக இருந்து குடும்பம் நடத்தும் வாய்ப்புக் கிடைத்திருப்பது திரை யுலகில் ஒரு பெரிய மாறுதல் இல்லையா?

ஏமாற்றுவதையே தொழிலாகக் கொண்டவன் வக்கீல் குமாஸ்தா ஈசுவரமூர்த்தி; அவனிடம் ஏமாறுவதற்கே ஏற்பட்டவன் சிங்கப்பூர் சங்கரலிங்கம்; படத்தில் பல துன்பங்களை அநுபவிப்பதற்கென்றே பிறந்தவள் மாலதி; திரைக் கதைப் பாத்திரங்களில் வடிகட்டின அசடாக வந்து, கதையை வேகமாகப் பல வழிகளிலும் ஓட்டி, மேலும் மேலும் பல சிக்கல்களை விளைவித்தும், விடுவித்தும் வந்து கடைசியில் படுபோக்கிரி ஒருவனுக்கு வாழ்க்கைப் பட்டு, உயிர் துறப்பதற்கென்றே வந்தவள் வக்கீல் குமாஸ்தா ஈசுவரமூர்த்தியின் ஏக புத்திரி ஞானம்; படம் பார்ப்பவரைச் சிரிக்க வைப்பதற்கென்றே வந்து, கதியற்ற மாலதிக்குப் பேருதவியா யிருந்து அவளை அவள் காதலனுடன் சேர்த்து வைப்பதற்குப் பல விதத்திலும் உறுதுணையா யிருந்தவர்கள் ஈசுவரமூர்த்தியின் வீட்டு வேலைக்காரனும் அவன் மனைவியும்தான். மாலதியைக் காதலிப்பதற்காகவே பிறந்தவன் ஈசுவர மூர்த்தியின் மகன் ராஜா.

சென்னையில் படிக்கும் தன் மகள் மாலதியைப் பராமரிக்கும் பொறுப்பையும் அதற்காக ஒரு லக்ஷம் ரூபாயையும் ஈசுவரமூர்த்தியிடம் சிங்கப்பூர் சங்கரலிங்கம், தான் மரண காயமுற்றுப் படுத்திருந்தபோது ஒப்புவித்தார். மாலதி சிங்கப்பூரிலிருந்து வந்த கடிதத்துடன் ஈசுவரமூர்த்தியின் இல்லம் சேர்ந்தாள்.

பாலையாவுக்கு வெள்ளித் திரையில் பழக்கப்பட்டுப்போன கபட நாடகமும், மோசடி

வேலைகளும் இதிலிருந்துதான் இந்தப் படத்தில் உருவாகின்றன. பாலையாவுக்கு எந்தப் பாத்திரத்தையும் தம் சொந்தப் பாத்திரமாக ஏற்று நடிக்கும் திறமை உண்டு என்று இந்தப் படத்தைப் பார்ப்பவர்கள் ஒப்புக் கொள்ளுவார்கள். சில இடங்களில் அவர் நடிப்பில் கோமாளித்தனம் அதிகமாகத் தலை காட்டினாலும், இந்தப் படத்தில் அவர் நடிப்பு நன்றாயிருக்கிறது. இயல்பான அவர் பேச்சில் ஹாஸ்யம் கலந்து கொண்டு சுவாரஸ்யமாயிருக்கிறது. சங்கரலிங்கம் அனுப்பிய லக்ஷம் ரூபாயையும் ஏப்பம் விட்டு விட்டு, போக்கிரி மாசிலாமணிக்கு மாலதியை விலை பேசி மோசமாக மணம் முடிக்க முயன்றபோதும், கடைசியில் சங்கரலிங்கத்தையே எதிர்பாராத விதமாகச் சந்தித்தபோதும் மொத்தத்தில் பாலையா பெரிய நடிகர் என்பதை அவர் நடிப்பு ருசுப்படுத்துகின்றது.

ஈசுவரமூர்த்தியின் மகள் ஞானமாக நடிக்கும் மைனாவதி அரைக் கிறுக்காகவே மாறி விட்டதுபோல் பாவத்துடன் நடித்திருக்கிறார். மாலதியும் ராஜாவும் சந்திக்கும்போதெல்லாம் ரகசியமாகப் பார்த்து வந்து அம்மாவிடம் சொல்லிக் கதைக்கு விறுவிறுப்பு ஊட்டியபெருமை அவரையே சாரும். இல்லையென்றால் திரைக் கதை எந்த இடத்திலும் நகராமல் உட்கார்ந்திருக்கும்!

மாலதியாக நடித்த பண்டரிபாய் நல்ல முக பாவங்களுடன் சந்தர்ப்பத்துக்கும் சமயத்துக்கும் ஏற்றபடி நன்றாக நடித்திருக்கிறார். ஏழைமை நிலையிலிருந்து ஒரு சிறு ஆதரவு கிடைத்து, தன் மனங் கவர்ந்த இளைஞனைக் காதலித்து மகிழ்ந்தபோதெல்லாம் பண்டரிபாயின் நடிப்பு உயர்வாயிருக்கிறது. காதல், தப்பியோடுதல், துக்கம், மீண்டும் ஒன்று சேருதல் முதலிய கட்டங்களில் சோடை போகாமல் சமாளித்து விட்டார் என்றே கூற வேண்டும்.

இந்தப் படத்தில் என். எஸ். கிருஷ்ணன், டி. ஏ. மதுரம் இருவருக்கும் நிறையச் சந்தர்ப்பங்கள் கிடைத்திருக்கின்றன. பழைய ஹாஸ்யம், புதிய ஹாஸ்யம் என்று ரொம்ப வேற்றுமை காட்டாமல் பார்த்தால் எல்லாக் கட்டங்களிலும் சிரிப்பு வரும்! இருவரும் திறமையாகப் பேசி நடிக்கிறபடியினால் படத்தில் நகைச்சுவை நன்கு மிளிர்கிறது.

இந்தப் படத்தை எடை போட்டுப் பார்த்தால், குறைபாடுகள் பல இருப்பதுபோலவே, சில நல்ல அம்சங்களும் காணப்படும். நல்ல அம்சங்களைத் தேடும் போது, குறைபாடுகள் குறுக்கிடுகின்றன; குறைபாடுகளைக் கவனிக்கும்போது சில நல்ல அம்சங்கள் மின்னல் போல் தோன்றி மறைகின்றன. மந்த கதியில் துவங்கிய படம், இடை இடையே விறு விறுப்பாக ஓடிக் கடைசியில் எப்படியெல்லாமோ திசை தப்பிச் சென்று விபரீதமாக எதுவும் நிகழ்வதற்கு முன்பு நல்ல வேளையாக முடிந்து விடுகிறது!

இச் சமயம் ஒரு அசம்பாவிதமான காட்சி நினைவுக்கு வருகிறது. வெறியன் மாசிலாமணியின் பலாத்காரக் கொடுமையிலிருந்து தப்பித் தன் பள்ளித்தோழி ஜயஸ்ரீயைத் தஞ்சம் அடைகிறாள் மாலதி. ஒரு படத்துக்கு ஒரு பலாத்காரக் கொடுமை போதாதா? இன்னொரு பலாத்கார முயற்சி நடக்கிறது, ஜயஸ்ரீயின் வீட்டில். தஞ்சமடைந்த மாலதியை ஜயஸ்ரீயின் அண்ணன் மனோகர் கெடுக்க முயன்று நள்ளிரவில் அவள் தூங்கும்போது அவள் வனப்பில் ஈடுபட்டு, பிறகு மிருகப் பிராயமாக மாறுகிறான். அத்துடன் நில்லாமல் அவன் சொற்பொழிவுக்கும் ஆரம்பித்து விடுவது திரையுலகின் துர்ப்பாக்கியந்தான்! ஒரு பெண்ணிடம் ஆண் தகாத முறையில் நடந்து கொள்ளுவதாக வரும் கட்டங்கள் எத்தனையோ தடவை நம் தமிழ்ப் படங்களில் வந்து விட்டன; திரைக்கதை ஆசிரியர்கள் கூடிய வரையில் அவற்றைத் தவிர்க்க முயன்றால் மிகவும் நல்லது. புதிய கருத்துக்களையும், புதிய காட்சிகளையும், புது வித ஜோடனைகளையும் புகுத்த வேண்டும் என்னும் ஆர்வம் நம் படாதிபதிகளுக்கு ஏற்படாத வரையில், படம் பார்ப்பவர்கள் ஏற்கனவே பல படங்களில், பலவிதங்களில் பார்த்த காட்சிகளைத்தான் மீண்டும் மீண்டும் பார்க்க வேண்டும்.

சப்பென்றிருக்கும் கோர்ட் காட்சி வந்த சுவடு தெரியாமல் மறைந்து விடுகிறது. திடீரென்று நீதிஸ்தல விசாரணை துவங்கியதும் என் மனத்தில் ஒரு திகில் பிடித்துக் கொண்டது. இந்த விசாரணைக் கூடத்தில் ஒரு மாபெரும் சொற்பொழிவு நடைபெறுமோ என்ற ஐயத்துடன், ஏற்கனவே சிதறிப் போயிருந்த பொறுமையை யெல்லாம் ஒன்றாகத் திரட்டிக் கொண்டேன். படக் காட்சிக்கு இடையில் கத்திரிக்கோலை நறுக்கென்று உபயோகப் படுத்தினது போல் அந்தக் காட்சி மறைந்து போனதனால் யாருக்கும் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. படத்தின் ஆரம்ப வேகம் கடைசியில் மெதுவாகி விடுவதைத் தவிர்த்திருந்தால் 'நன்னம்பிக்கை'யை நம்பிக்கையோடு பார்க்கலாம்.



# யோக சிகிச்சை

## சுந்தரம்

### 5. திருட்டு வஞ்சகம்!

**மா**னிட சரீரத்தின் எந்தப் பாகத்தைக் கண்டாலும் டி. பி. கிருமிகள், நாக்கைத் தீட்டிக் கொண்டு, தொத்திக் கொள்ளும். இதை முன்பே கூறியிருக்கிறேன். ''எலும்பு தானே! கிருமிக்குக் கடிக்கக் கஷ்டமாக இருக்குமே'' என்ற எண்ணமோ, ''தோல் தானே! கொழுப்பு மில்லாது சப்பையாகப் பூச்சியின் நாக்குக்கு இருக்குமே!'' என்ற எண்ணமோ தவறாகும். எது எளிதில் பலமிழந்து அகப்படுகிறதோ, அதில் இப் பூச்சி உடனே வாய் வைத்து விடும். எனினும், இந்த டி. பி. கிருமிக்கு. 'லங்ஸ்' — நுரையீரல் — சுவாசக் கருவி என்றால், பஞ்சப்பிராணன். தரமாமிச பட்சணியான, நரனுக்கு, 'மொழு மொழு' 'கொழு கொழு' குழந்தை என்றால் ஹல்வாக்கட்டி மாதிரியாம்! சகல பட்சணியான அசைவ நரனுக்கு ''சிக்கன் சூப்'' என்றால் நாக்கில் ஜலம் சொட்டும். இவை எல்லாவற்றைக் காட்டிலும், டி. பி. கிருமிக்கு 'லங்ஸ்' அம்சத்தின் மேல் அவ்வளவு சொல்ல முடியாத ஆசையும், ருசியும்.

சுவாசக் கருவிக்குள் நுழைவதும் எளிது. இதன் தெள்ளிய சதை அணுக்களில் ஒட்டிக் கொள்ளுவதும் மிக்க எளிது. இங்கு நுழைந்து ஒட்டிக் கொண்டு விட்டால் — கடித்த கட்டெறும்பை விலக்க, மனிதன் சதையையும், அதன் தலையையும், கிள்ளித்தான் எடுக்க வேண்டி வருவது போல — கிருமியை எளிதில், இது முகாம் போட்டு பட்சித்து நிற்கும் சதையிலிருந்து பிரிக்க இயலாமல், இரண்டையுமே வெட்டி எடுக்க வேண்டி வரும். சுவாசப் பையின் இரண்டு பாகத்தில் ஒரு பாகத்தையும்கூட முழுசாக வெட்டி எறிய வேண்டி வரும்.

சுவாசக் கருவியைத் தாக்கிய பொழுதுதான் தெரியும், 'இந்த டி. பி. மிக்க அபாயமானது என்று! மடிவதும் இதனால்தான் அதிகம். எளிதில் நோய் கொள்ளுவதும் சுவாசக் கருவிதான். மிக்க மிக்க ஆராய்ச்சியும் இந்த லங்ஸ் டி.பி.யைப் பற்றித்தான் நடந்திருக்கிறது. நடந்து வருகிறது. நாமும் சுவாசக் கருவியின் டி. பி. யைத்தான் முதலில் ஆராயப் போகிறோம். இதற்குத்தான் முதல் முக்கிய ஸ்தானம் தருவோம். சுவாசக் கருவி டி. பி. யால் தாக்குண்ட நிலையை ஆங்கிலத்தில் 'பல்மனரி டியூபர்குலாஸஸ்' என்று சொல்கின்றனர்.

டி. பி. தொத்தும் நோய் என்றோம். இவ்வாறு தொத்துவதற்கும் வசதியாக ஏற்பட்டிருப்பதும் சுவாசக் கருவிதான். கிருமி எங்கிருக்கிறது? எப்படித் தொத்துகிறது? ஆகாயத்தில் இருக்கின்றதா? ஆகாயத்திலும் தான் இருக்கிறது. ''சரி! எந்த ஆகாயத்திலிருக்கின்றதோ, அதற்குச் சாம்பிராணி, கண்ணீர்ப் புகை போட்டு, கொன்று விடலாம்'' என்று முயற்சிக்கவும் இயலாது. சாம்பிராணிப் புகை அல்ல, அணுகுண்டுப் புகையும் இதை ஒன்றும் செய்ய இயலாது. இதற்குக் காரணம், இதன் மிக்க சூக்ஷ்மத் தன்மைதான். சொல்லுக்கும் துலங்காதது. இதைப் புகைக்கும் எப் புகையும் இது வரை கண்டு பிடிக்கப் படவில்லை.

**ஆ**காயத்தில் இது பரவி சூட்சுமமாக அழிவுக்கு எட்டாததாய், கண்ணுக்குத் துலங்காததாய் இருப்பதால் தான் இதன் அபாயமும் இது நுழையும் அபாயமும் தீவிரமானவை. இயற்கை, ஆகாயத்தைப் படைக்கும் பொழுதே டி. பி. கிருமியையும் கலந்தே படைத்து விட்டதோ? உலகின் ஆகாயப் பரப்பெங்குமா இது இருக்கிறது? இவ்வாறு படைக்கப்பட்டதாகத் தெரியவில்லை; ஆகாயத்தில் எந்தப் பாகத்தில் இது விமான சவாரி செய்கிறதென்பதும் கூறுவதற்கில்லை. இயற்கை ஆகாயத்தைப் படைக்கும் பொழுதே டி. பி. யையும் கலந்து படைத்து விட்டது என்று கூற இயலாவிடினும், ஆகாயத்துக்குள் டி. பி. கிருமியை அமோகமாகக் குடியேற்றுகிறவர்கள் உண்டு என்பதையும், அவர்கள் யார் என்பதையும் விஞ்ஞானம் அறிந்துள்ளது!

ஆகாயத்துக்கு டி. பி.யைத் தானம் செய்கிறவர்கள், லங்ஸ் டி.பி. கொண்ட நோயாளிகளே! ஆகாயத்துக்கு 'அன்று தான் ஏற்றுமதி செய்தார், இன்றுதான் செய்தார்' என்பது இன்றி என்றுமே ஏற்றுமதி செய்து நிற்கின்றார்கள்

நோயாளிகள்! ஜன சமூகத்தின் மேல் பகையா, இவ்வாறு தம் டி.பி. சரக்கை வெளி உலகில் வாரி வீச? இவர்கள் சுய இச்சையாலா செய்கின்றனர்? இவருக்கு மாந்தர் மேல் பகை இல்லை! டி.பி. கிருமிகளை ஆகாயத்தில் வெளித் தள்ளுவதும் இவர்களுடைய இச்சையிலோ சக்தியிலோ, கட்டுப்பாட்டிலோ இல்லை!

இவர் இஷ்டப்பட்டாலும், இஷ்டப் படா விட்டாலும், நோயாளியைப் பற்றிய டி.பி. கிருமியானது, வம்சாபி விருத்தி அடைந்து, சுவாசத்துடன் தன் சுய தர்மத்தினால், ஆகாயத்தில் சஞ்சரிக்க, புது ஸ்தலங்களில் குடி புக உலாவுகின்றது!

ஏகாதிபத்திய மூர்க்கனைக் காட்டிலும் இந்த டி.பி.க்கு சாம்ராஜ்யப் பேராசை அதிகம்! புது உடல்களைத் தேடி, தாவிக் கொண்டே போகும். இக் காரணம் பற்றியே இது தாவும் தொத்தும் முறையும், இத் தாவுதலைத் தடுக்கும் முறையும், தாவித் தொத்திய பின் வளராது தடுக்கும் முறையும், மிகப் பெரிய அவசர ஸ்தானம் இங்கு பெறுகின்றன.

டி.பி. யைத் தடுக்கும் முறைகளும் டி.பி. நோயின் சிகிச்சைக்குச் சம்பந்தப் பட்டதே ஆகும். 'தடுப்பதைப் பற்றி என்ன கவலை, வந்தநோய்க்குச் சிகிச்சை அளித்தால் போதுமே' என்பது ஒரு நிய சக்கரத்துக்கு இடம் கொடுக்கும். தொத்துவதைத் தடுக்கா விட்டால் இன்னும் பலருக்கும் டி. பி. பரவுகின்றது. இவனுக்குச் சிகிச்சை அளிக்குமுன், இன்னும் பலர் நோயாளிகளாக, சிகிச்சைக்குச் சேர்ந்து விடுகின்றனர். இதன் பயன் என்ன? சிகிச்சையும் தடுப்பு முறைகளும் ஒன்றையொன்று தழுவி நிற்கின்றன.

ஆகாயத்தில் மட்டும்தான் பரவித் தொத்திக் கொள்ளுகிறது என்பது தவறு. மனிதனுக்கு மனிதன் இந்த டி. பி. கிருமி தாவும் பொழுது, ஆகாயத்தை வசதியாகக் கொள்ளலாம். ஆனால் மிருகங்களிலிருந்தும் மனிதனுக்குத் தொத்துவது சாதாரணம். மிருகம் தரும் இந்த அபாயத்தைப் புறக்கணிக்க முடியாது. மிருகத்திலிருந்து மனிதனுக்குத் தொத்துங்கால், ஆகாய வசதியை டி. பி. தேடாது. இவ்விலங்கு தரும் பொருள் மானிடன் ஏற்றால், டி. பி. கிருமி பொருள் மேல் சவாரி செய்து கொண்டு உள்ளே நுழைந்து விடும்.

டி. பி. மிகப் பொல்லாத பயங்கரம்! தற்கால மருந்து முதலிய சிகிச்சைகளுக்கு அடங்காதது என்று மட்டும் அறிவோம். ஆனால் இதன் திருட்டுக்

குணம், ஏமாற்றும் வழிகள் டி.பி.யை மிக்க வஞ்சக ஆபத்து சத்துருவாக மாற்றி விடுகின்றன. எதிரி வரப் போகிறான், இம்மாதிரி தான் வரப் போகிறான் என்று தெரிந்தால், பாது காப்புக்கள் திட்டம் செய்து கொள்ள லாம். கண்களுக்கோ புலன்களுக்கோ புலப்படும் எதிரியாக இருந்தாலும், இவன் நெருங்குவதை, நுழையப் போவதை, நுழைவதை, அறிந்து தடுக்க முயலலாம்! தடுப்பதையும் மீறி உள் நுழைந்து விட்டாலும், இவனைக் கொல் லவோ வெளித் தள்ளவோ செய லாற்றலாம்.

ஆனால் டி. பி. கிருமி, ''இதோ வருகி றேன்!'' என்று ராணுவவாத்தியகோஷ்டி ஒலி பெருக்கியுடன் வருவதில்லை. இது மனிதனுள் நுழையுங்கால், ஆடம் பரங்கள் விளக்கிக் கொள்ளுவதில்லை. இது நுழைந்த அச்சமயமே இதைக் காட்டிக் கொடுக்க எவ்வித சின்னங்களை யும் அனுபவத்தையும் பகிரங்கமாக்குவ தில்லை. இந்த டி. பி. கிருமி மனிதனுள் நுழைந்த இத்தனை நாட்களுக்குள்தான் நோய்த் தன்மையை வெளிப்படுத்தும் என்று கூற முடியாது. பல பல வருஷங் களுக்குத் தான் நுழைந்து விட்டதை அறிமுகப்படுத்தாமல் இருக்கும். இதற் குக் காரணம், ''ஐயோ! மனிதன் அப்பாவி!'' என்ற பச்சாத்தாபம் ஏற்படுவதனால் அல்ல!

மனிதன் உடலும் ஒரு பெரிய ராணு வக் கோட்டை போல்தான் படைக்கப் பட்டுள்ளது. அபாயம் விளைவிக்கும் அன்னிய வஸ்து, தன்மை எது உடலி னுள், புகுந்தாலும், அத்துடன் போராட உடனே இயற்கை போர்வீர அம்சங்கள் கிளம்புகின்றன. இவைகளை வென்றால்தான் டி. பி. தன் தலையை வெளியே காட்டி, பல சின்னங்களை விளக்குதல் என்ற ஜெயபேரிகையைக் கொட்டும்! இயற்கை அம்சங்களால் டி. பி. சத்துரு தோற்கடிக்கப்பட்டு விடும். அப்பொழுது, மனிதனுக்கு டி.பி. தன்னுள் புகுந்ததொன்றும் தெரி யாது. தன் இயற்கை பலம் இதை வென்று விட்டதென்றும் தெரியாது. சில சமயங்களில், வெற்றி தோல்வி என்ற அரைகுறை முடிவுகளுடன் நில்லாது உடல்வலிவு டி.பி. கிருமியைப் புல்பூண்டு இன்றி அறவே கொன்று அகற்றி விடும். இந்தப் போரும், இதன் முடிவும், மனிதன் அறியவே மாட்டான். அரசன் என்ற மனிதனுக்குத் தொல்லை தராமல், அதன் ராணுவம் என்ற உடல் சக்தி, டி. பி. என்ற சத்துருவை வென்று நாசமாக்கி விடும். (தொடரும்)

# ஏகுபதி ராகலை

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

44

ஏசுநாதருடைய சரித்திரம் உண்மைச் சரித்திரமா அல்லது வெறும் கதையா என்கிற கேள்வியைப் பற்றி நான் கவலைப்பட மாட்டேன். அந்த விசாரமே எனக்கு வேண்டியதில்லை. ஏசுநாதருடைய சரித்திரம் உண்மையல்ல; அது ஒரு கற்பனைக் கதை என்று யாரேனும் நிரூபித்து விட்டாலும் அது என்னுடைய கொள்கையைப் பாதிக்காது. ஏசுநாதர் உண்மையில் இருந்தவராயினும் சரி, அவருடைய சரித்திரம் கற்பனையாக இருந்தாலும் சரி, அவருடைய உபதேசமாக நாம் பெற்றிருப்பதே போதும். அதில் காண்பது சத்திய வாக்கு. அந்தப் பேருண்மை சிறிதளவும் குறைவுபடாது.

[யங் இந்தியா 31—12—31]

ஏசுநாதர் ஒருவரே தெய்வ அவதாரம் என்று நான் ஒப்புக் கொள்ள முடியாது. கண்ணன், ஸ்ரீராமன், முகம்மது நபி, ஸோராஅஸ்தர் முதலியவர்களுக்கு எவ்வளவு தெய்விகம் உண்டோ, அவ்வளவு ஏசுநாதருக்கும் உண்டு. பைபிலில் இருக்கிற ஒவ்வொரு மொழியும், வேதத்திலுள்ள ஒவ்வொரு மொழியும், குர்ஆனிலுள்ள ஒவ்வொரு வாக்கியமும் கடவுள் வாக்கியம் என்று நான் எண்ண முடியாது. ஆனால் இந்தப் பல சமய சாஸ்திரங்கள் மொத்தத்தில் தெய்வ வாக்கு என்றே சொல்லுவேன். ஒவ்வொரு வரியும் புறக்கணிக்கக் கூடாத கடவுள் உத்தரவு என்று நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். என்னைப் பொருத்த மட்டில் கீதை, குர் ஆன், பைபில், இவை ஒவ்வொன்றுமே மதிப்புக்குரிய தெய்விக சாஸ்திரமாகும்.

[ஹரிஜன், 6—3—37]

"நீர் ஏசுவை என்னவாகக் கருதுகிறீர்கள்?" என்று ஒரு கேள்வி. அதற்கு நான் சொல்லும் விடை என்னவென்றால், உலகத்தில் அவதரித்து மக்களுக்கு உபதேசம் செய்த முனிவர்களுக்குள் ஒருவர் என்பேன். மிகப் புனிதமான உபதேசம் செய்தவர். கிறிஸ்தவர்களுக்கு அவர் ஆண்டவனுடைய ஔரஸ புத்திரர். நான் அவ்வாறு ஒப்புக் கொள்ளாதபடியினால் அவருடைய உபதேசத்தின் மகிமை எள்ளளவும் குறையாது. கிறிஸ்தவர்களுடைய இந்தக் கொள்கையை ஒப்புக் கொள்ளாதபடியினால் என்னுடைய வாழ்க்கையில் அவருடைய உபதேசம் பயன்படுவதில், ஒரு ஏற்றத் தாழ்வும் உண்டாகாது. ஏசுநாதர் மக்களுக்குச் சொன்ன உண்மையும் காட்டிய வழியும் எனக்கு இல்லாமற் போகுமா? கட்டாயம் போகாது.

உலகத்திலுள்ள பல சமயங்களை ஒன்றுக்கொன்று தாரதம்யம் பார்த்து மதிப்பிட முடியாது. அப்படிச் செய்யப் பார்ப்பதும் தவறாகும். அவை யெல்லாமே மனிதன் வாழ்க்கையை நல் வழியில் செலுத்தும். அதற்காகவே அவை தோன்றின. ஏசுநாதருடைய சரித்திரம் மக்களை நல் வழியில் செலுத்துவதற்கு மிகவும் பயன்படுகிறது. அவர் கிறிஸ்து மார்க்கத்துக்கு மட்டும் உரிமைப் பட்டவர் அல்ல. உலகத்தில் எல்லா ஜாதியினருக்கும் அவரை உரிமை பாராட்டும் பாத்தியம் உண்டு. எந்த ஜாதியினராயினும் பரம்பரையாக வந்த எந்தத் தெய்வத்தை வழிபடுபவர்களாயினும் அவர்கள் எல்லாருமே ஏசுநாதரைத் தங்கள் உடைமையாகக் கருதலாம்.

[மாடர்ன் ரிவியூ, அக்டோபர், '41]

பகவத்கீதையில் செய்யப்பட்ட உபதேசத்துக்கும் ஏசுநாதர் குன்றின் மேல் நின்று செய்த உபதேசத்துக்கும் ஒரு வேற்றுமையும் என்னால் காண முடியவில்லை. ஏசுநாதர் உள்ளத்தில் பதியும் படியாகச் சொன்ன உண்மைகளே பகவத்கீதையிலும் சூத்திரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பகவத் கீதையானது மானச தர்மத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு வைராக்கியத்தின் மேன்மையை நிரூபிக்கிறது. பௌதிக சாஸ்திரத்தில் உண்மைகளை நிரூபித்துக் காட்டுவது போல் பற்று நீக்கி வாழ்க்கை நடத்துவதே மேலான வழி என்று விளக்கிக் காட்டப் பட்டிருக்கிறது. இதையே குன்றின் மேல் நின்று ஏசுநாதர் மிக அழகான மொழிகளில் உபதேசித்திருக்கிறார். பைபிலில் பூர்வ பாகத்தில் காணப்படும் சில பகுதிகள்

எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் புதிய சுவிசேஷம் என்று சொல்லப்படும் பிற் பகுதி என்னுடைய உள்ளத்துக்கு அளவு கடந்த சாந்தியும், எல்லையற்ற மகிழ்ச்சி யும் தந்தது. இன்று எக் காரணத்தினு லாவது திடீர் என்று பகவத் கீதை மக்களுக்குக் கிடைக்காமற் மறைந்து போனாலும், அதில் சொல்லப்பட்ட தனைத்தையும் அனைவரும் மறந்து விட்டு அழிந்தே போனதாக ஏற்பட்டாலும், ஏசுநாதருடைய வாக்கியங்கள் மட்டும் இருந்தால் போதும். கீதையில் நான் அடையும் மகிழ்ச்சியையும் சாந்தியை யும் அதனின்று அடைவேன்.

*[யங் இந்தியா, 22—12—27]*

கிறிஸ்து மதம், பௌத்த மதம், ஹிந்து மதம் - இவற்றைப் போலவே இஸ்லாம் மார்க்கமும் சாந்தி மார்க்க மாகும். பேதங்கள் இல்லை என்று நான் சொல்ல வில்லை. சமயக்கொள்கைகளில் வேறுபாடுகள் உண்டு. ஆனால் இச் சமயங்கள் அனைத்துக்கும் நோக்கம் ஒன்றே. *[யங் இந்தியா, 20—1—27]*

பாரத நாட்டின் ஆத்மீகச் செல்வம் இஸ்லாம் மார்க்கத்தினின்று இரு விதத் தில் லாபம் அடைந்திருக்கிறது என் பதில் சந்தேகமில்லை. ஆண்டவன் ஒரு வனே, கடவுள் ஒன்று என்பதைப் பற்றி எள்ளளவும் குழப்பமின்றி உறுதியாக ஊர்ஜிதப் படுத்தியது இஸ்லாம் தமக் குச் செய்த ஒரு பணி. மக்களிடையே சகோதர சமத்துவத்தை வாழ்க்கையில் நடத்திக் காட்டியது இரண்டாவது பணி. இந்த இரண்டு பணிகளையும் நான் பெரிதாகக் கருதுகிறேன். ஹிந்து சாஸ்திரத்திலும் சகோதர சமத்துவம் இருக்கிறது. ஆயினும் அதைப் பலவித மாக ஆண்டு குழப்பிவிட்டிருக்கிறார்கள். வேதாந்தமாகச் சமத்துவம் சொல்லு கிறார்களே யொழிய, வாழ்க்கையில் சகோதர தர்மம் பழுதுபட்டிருக்கிறது. அதைப் போலவே, ஹிந்து சமயங்களில் கடவுள் ஒன்றேயாயினும் ஆசரணையில் பல தெய்வங்களை வைத்துக் கொண்டு வழிபடுவதால் குழப்பம் ஏற்பட்டிருக் கிறது. ஈசன் ஒருவனே என்று இஸ்லாம் மார்க்கத்தில் வேற்றுமைக்கு இடந்தரா மல் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வழியில் பாரத நாட்டின் பண்பாடு இஸ்லாம் மார்க்கத்தினின்று லாபம் அடைந்திருக்கிறது என்றுசொல்லலாம்.

*[யங் இந்தியா, 21—3—29]*




(சென்ற வாரத் தொடர்ச்சி)

மன்னனின் மறைவுக்குப் பிறகு, குதூகலமாகப் படைகளைச் செலுத்திய செங்கிஸ்தான், எதிரே நின்ற ராஜபுத்திரப் படைகளைக் கண்டு திகைத்தான். ''பழிக்குப் பழி!'' என்று கூவிக் கொண்டு தாக்கிய படைகளைச் சமாளிக்க முடியாமல் பின் வாங்கியது பாரசீகப் படை. தளபதி விக்ரம சிம்மனின் தலைமையிலும், ராணி பவானியின் தலைமையிலும் புறப்பட்ட வீரப் படைகள் அன்று செய்த வீரப் போர் சித்தூர் சரித்திரத்திலேயே மறக்க முடியாத படி பதிந்து விட்டது!

அரண்மனையை விட்டு வெளியே வராத பவானி இரு கைகளிலும், வாட்களைக் கொண்டு பம்பரம் போல் சுழன்று போராடினள்! ஆக்ரோஷத்துடன் போரிட்ட அவள், செங்கிஸ்கானின் தோளில் காயப்படுத்தினள். சேனைத்தலைவன் வேறொரு குதிரைமாற்றுமுன், செங்கிஸ்கான் தோளில் ஏற்பட்ட காயத்தினால் மயக்கமுற்று விழுந்து விட்டான். மன்னனைத் தன் குதிரையில் ஏற்றிய வண்ணம் போராடினன் சேனைத்தலைவன். இரவு நேரம் வரையில் வெற்றி, தோல்வியின்றி நடைபெற்று வரும் போரைக் கவனித்தான். பாரசீக வீரர்களின் எண்ணிக்கை குறைந்து விட்டதையும் அவன் கண்டான்! இரவில் படை வீரர்கள் சண்டையை நிறுத்திவிட்டுத் தங்கள் பாசறைக்குச் சென்று விட்டனர்.

ராணி பவானி தன் பாசறையில் உலாவிக் கொண்டிருந்தாள். தளபதி விக்ரமன் ஒரு பக்கம் நின்று கொண்டிருந்தான்.

'' தளபதி! இன்றையப் போரின் நிலைமை பற்றி உமது அபிப்பிராயம் என்ன?''

''இன்றையப் போரின் நிலைமை திருப்திகரம். ஆனல் நாளையப் போரில்தான் நாம் உஷாராக இருக்கவேண்டும்.''

இச் சமயம் தளபதியின் காலடியில் 'சர்' என்று பாய்ந்து வந்த ஒரு அம்பு குத்திட்டு நின்றது! யாவரும் திடுக்கிட்டனர். தூரத்தில் குதிரைகளின் குளம்படிச் சப்தம் தெளிவாகக் கேட்டது. பரபரப்புடன் வெளியே வந்தான் விக்ரமன். பாசறையைச் சூழ்ந்து கொண்டு நெருங்கும் பாரசீகப் படையைக் கண்டான். உள்ளே ஓடினன்.

''மகாராணி! பாரசீகப் படைகள் பாசறையைச் சூழ்ந்துகொண்டன. புறப்படுங்கள்! கூடியவரை எதிர்ப்போம்!''

''துரோகி! பகலில் போரிடத் துணியாத அவன், இரவிலா வருகிறன். தற்காப்புப் படைகளைக் கொண்டு எதிர்ப்போம்!''

இரவில் காவல் காத்து வந்த தற்காப்புப் படையுடன் மோதியது பாரசீகப் பெரும் படை. எதிர்பாராத எதிர்ப்புக்கு இலக்கான ராஜபுத்திரர்கள் ஒருவர்பின் ஒருவராகக் கீழே விழுந்தனர். இரவில் களைப்பின் மிகுதியால் உறங்கும் வீரர்களைக் கொன்று குவித்தான் செங்கிஸ்கான். அந்த அழிவுக்குப் பாத்திரமானவர்கள் பவானியும், தளபதியும். குதிரையில் இருந்தபடியே படுகாயமுற்றுக் கீழே விழுந்தான் தளபதி! மார்பில் அம்புடன் வீரசுவர்க்கம் சென்றுள் பவானி!

வெகு கலபத்தில் விரோதியின் வசமாயிற்று சித்தூர். தன் தோல்விக்குக் காரணமாக இருந்த பவானியின் அரண்மனையைச் செங்கிஸ்கான் படைகள் தரைமட்டமாக்கின.

★

''பிரபாகரசிம்மா! அருமை நண்பா! கேட்டாயா என் சோக சரிதையை! பெற்ற தாயின் ஸ்தானத்திலிருந்து கொண்டு என்னை அருமையாக வளர்த்தவள்தான் சந்திராவதி! அன்னியனின் ஆட்சியை அழிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தாயா இப்பொழுது பிரபாகர்! நான் அரசனுக வேண்டுமென்ற எண்ணம் இல்லை! என் தாயை வஞ்சகமாகக் கொன்ற அவனைப் பழிக்குப் பழி வாங்க



வேண்டும்! சித்தூர் சுதந்திர நாடாக என்றென்றும் விளங்க வேண்டும்!''

'' குமாரசிம்மா! என்றென்றும் தலைவனாக நீ விளங்க வேண்டும்! அதற்காக என் உயிரையும் தியாகம் செய்யத் தயங்க மாட்டேன்! சித்தூரின் விடுதலையே என் ஜீவலட்சியம்! குமாரசிம்மா! இது என் வாளின் மேல் ஆணை! பவானி மாதாவின்மீது ஆணை!''

''பிரபாகரசிம்மா! நீயே உத்தம நண்பன்!'' என்று குமாரசிம்மன் நண்பனை அணைத்துக் கொண்டான். இருவர் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது! அதே சமயம் மரத்தின் பின்னாலிருந்த ஒரு உருவம் அவர்களுக்குத் தெரியாமல் மறைந்தது!

கோபத்தின் சிகரத்திலே இருந்தான் செங்கிஸ்கான்! ஆத்திர மிகுதியால் அள்ளி வீசினான் வார்த்தைகளை! குறுக்கும் நெடுக்கும் உலாவினான் மன்னன். ''வெட்கம், அவமானம்! எதற்கு நீங்கள் காவலாளியாக இருக்கிறீர்கள்; பொருள்களைக் கொள்ளை கொடுக்கவா! கொள்ளையிடும் வரை என்ன செய்து கொண்டிருந்தீர்கள்! நேற்று அமைச்சரின் வீட்டில் சூறையாடப்பட்டது. இன்று அரண்மனை பொக்கிஷ அறையில் கொள்ளை. கோழைகள்! என் முன் நிற்காதீர்கள், போங்கள்!'' என்று கத்தினான்.

தலை குனிந்து வெளியே சென்றனர் காவலாளிகள். அதுசமயம் ஒருவன் வந்தான்.

'' மன்னா! கண்டு பிடித்து விட்டேன், அவர்களை!'' என்றான் வந்தவன்.

'' யாரைக் கண்டு பிடித்தாய்? கலகத் தலைவர்களையா?''

'' ஆமாம். சித்தூர் சுதந்திரம் பெறத் தங்களால் இயன்ற வரையில் பாடுபடப் போகிறார்களாம்! அவர்களில் ஒருவன் இந்நாட்டு இளவரசன்! பவானியின் மகன்! பெயர் குமாரசிம்மன்! மற்றொருவன் பிரபாகரன்''

'' பிரபாகரன்! குமாரசிம்மன்! இரு விரோதிகளா! இருக்கட்டும், பார்த்துக் கொள்கிறேன். நம் சேனைத் தலைவரை உடனே இங்கே வரச் சொல்!''

இச்சமயத்தில் சேனாதிபதி வந்து நின்றான் அரசன் முன்பு.

சேனாதிபதி! உடனே சென்று நாட்டிலே நடமாடிக் கொண்டிருக்கும் கொள்ளைக்கும், நடக்கப்போகும் கலகத்துக்கும் காரண கர்த்தர்களான இரு குள்ளநரிகளைப் பற்றிய தகவல் கிடைத்திருக்கிறது. அதை அடக்க உடனே, படைகளுடன் புறப்படு. வெற்றியோடு திரும்பு!''

'' அப்படியே! செய்கிறேன்!'' என்று கூறிய சேனைத் தலைவன் வணங்கியவனாக வெளியே சென்றான்.

மூன்று மணி நேரம் ஆகியிருக்கும். செங்கிஸ்கானின் கண்கள் அவனுடைய அறை வாயிலில் குத்திட்டு நின்றன! அறையின் வாயிலில் உடலெங்கும் வழியும் ரத்தத்துடன் ஒரு வீரன் நின்றான்.

''எல்லாம் முடிந்து விட்டது. நம் படைகள் அழிந்தன!'' என்றான் வீரன் சோகத்தோடு. தொடர்ந்து ''மன்னா! நாம் படையெடுத்து வரும் விஷயம் முன்பே அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அவர்களும் போருக்குத் தயாராக இருக்க முடியாது! அவர்களைப் பிடிக்கச் சென்ற நாங்கள் அவர்களிடம் அகப்பட்டுக் கொண்டோம். சேனைத் தலைவர் தம்மால் இயன்ற வரையில் எதிர்த்தார். முடிவில் கலகக்காரத் தலைவனின் கையால் மாண்டார்!'' என்றான்.

'' சரி போதும், போ. இனி யாரை நம்பியும் பிரயோசனம் இல்லை! நானே செல்கிறேன்!'' என்று செங்கிஸ்கான் உறுமினான்.

'' தாங்கள் எதற்கு அப்பா செல்ல வேண்டும்! நான் இருக்கிறேன்'' என்றாள் ரஸியா! திடுக்கிட்டான் மன்னன்!

'' மெச்சுகிறேன் ரஸியா, உன் வீர மொழிகளை. நீ ஒரு பெண். உன் வீரம் எனக்கு நன்கு தெரியும். ஆனால் நம் சேனாபதியைக் கொன்ற அவர்களின் தலைவனை எளிதில் வெல்ல முடியாது. தந்திரங்களைக் கையாள வேண்டும்!''

சிரித்தாள் ரஸியா. ''தந்திரங்கள் எனக்கும் தெரியும் அப்பா, கையாள! சுத்த வீரர்களான ரஜபுத்திரர்களோடு நேருக்கு நேர் போர் புரிய வேண்டும். ஆனால் அவர்கள் சற்றும் எதிர்பாராதவண்ணம் போர் புரிய வேண்டும். அதுதான் சிறந்த வழி!''

''ரஸியா, பிடிவாதம் வேண்டாம். நான் சொல்கிறேன்!'

''அதைப் பற்றிய கவலை வேண்டாம் தங்களுக்கு. வருகிறேன்!''

ரஸியா தன் அறைக்குச் சென்றாள். போர் வீரனைப் போல் உடை அணிந்தாள். சிறு படையுடன் வெளியே சென்றாள்.

'' குமார்! இன்றுதான் கண்டேன் உன் லாகவமான வாள் வீச்சை! அதன் எதிரில்

நிற்க முடியாதபடி பின் வாங்கிய எதிரியின் சேனைத் தலைவனை வென்ற உன் வீரத்தை இன்றுதான் பரிபூரணமாக உணர்ந்து கொண்டேன்!'' என்றான் பிரபாகரன், தன் கைவாளைச் சுழற்றியபடி.

''பிரபாகர், தக்க சமயம் நீ வந்து செய்தியைத் தந்திரா விடில் நாங்கள் யாவரும் பிணமாகியிருப்போம். பிரபாகர்! உன்னால் தான் தப்பினோம். உன் உதவிக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!''

''என்னைப் பற்றிப் புகழாமல் இருந்தால், அதுவே நீ செய்யும் கைம்மாறாகக் கருதுவேன், குமார்! அதிகமான புகழ்ச்சிக்கு ஆளாக விரும்ப வில்லை நான்! என் கடமையைத் தான் செய்தேன். ஒற்றனாக அரண்மனை சென்றேன். விஷயத்தை அறிந்தேன். ஆனால் குமார், நம் இருப்பிடத்தை அறிந்த ஒருவன் அங்கே யிருக்கிறான். அவன் மூலமாகத்தான் அறிந்தான் செங்கிஸ்கான், நம் இருப்பிடத்தை. இல்லாவிடில் இன்று செங்கிஸ்கானின் சேனாதிபதி படை யெடுத்து வந்திருக்க முடியாது!''

''அந்த ஒற்றனைச் சும்மா விடக்கூடாது.''

''அதற்கு வேண்டியவைகளை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ சற்றுச் சிரமபரிகாரம் செய்து கொள! நான் அரண்மனை சென்று இன்னும் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டு வருகிறேன்!'' என்று கூறிப் பிரபாகரன் வெளியே சென்று குதிரை மீது ஏறிக் காற்றாய்ப் பறந்தான்.

திடீரென்று சூழ்ந்துகொண்ட படைகளைக் கண்ட குமார சிம்மனும், அவனுடைய நண்பர்களும் சற்றுத் திகைத்தனர். மறு கணம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு வெளியே பாய்ந்தனர். செங்கிஸ்கானின் வீரர்களோடு கை கலந்தனர். தன் வீரர்களை அனாயாசமாகத் தாக்கியவாறு வெகுவாக முன்னேறிக் கொண்டு வரும், குமார சிம்மனைக் கண்டாள் ஆண் வேடத்தில் இருந்த ரஸியா! தலைவனுக்குரிய காம்பீர்யம், வீரம் முதலியவற்றைக் கண்ட அவள், குமாரசிம்மனைத் தாக்க வெகு வேகமாகச் சென்றாள்! அவள் வரும் வேகத்தைக் கண்ட குமாரசிம்மன் சற்று ஒதுங்கி நின்று தன் வாளால் அவளைத் தடுத்தான். முதல் தாக்குதலிலேயே நிலைகுலைந்து விட்டாள் ரஸியா!

தன்னுடன் போரிட்டது ஒரு மங்கை, அதுவும் தன் மனத்தைக் கொள்ளை கொண்ட மங்கை என்பதை உணர்ந்த குமாரின் வாள் அவனை யறியாமல் கீழே விழுந்தது! அவன் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தான். வாள் இழந்த அவனை மறுகணம் கைது செய்தனர் வீரர்கள். கைது செய்யப்பட்ட பின்பும் அமைதியாக நின்றான் குமாரசிம்மன். அவனைப் பார்த்தாள் ரஸியா! அவளை அலட்சியம் செய்தது போல் இருந்தது அவன் பார்வை. செங்கிஸ்கானின் வீரர்கள் குமார சிம்மனை இழுத்துச் சென்றனர்.

*

''சபாஷ்! ரஸியா! செங்கிஸ்கானின் மகள் வீரத்தில், சற்றும் குறைந்தவளல்ல என்பதை உணரச் செய்தாய்! மெச்சுகிறேன் உன் வீரத்தை!'' என்றான் செங்கிஸ்கான், வெற்றியோடு திரும்பிய தன் மகளைப் பார்த்து! ஆனால் ரஸியா சிந்தனையே உருவாகத் தன் அறைக்குச் சென்றாள். மகளின் மௌனத்தைச் சற்றும் சட்டை பண்ணாத செங்கிஸ்கான், தன் ஜன்ம விரோதியைச் சந்திக்கச் சென்றான்.





ஹிந்துஸ்தான் மோட்டார் கார் சொந்தக் காரர்கள், இரட்டைப் பாதுகாப்பு அளிக் கும் மோபிலாயில் மூலம், தங்கள் கார் களை சுகமாக ஓட்டுகிறார்கள்.

## இரட்டைப் பாதுகாப்பு அளிக்கும்

# மோபிலாயில்

இந்த ஆயில், பறக்கும்
செங்குதிரை அடை
யாளமுள்ள இடத்
தில் மாத்திரமே கிடைக்கும்.




ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி
(யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது;
கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 2767

சங்கிலியால் பிணைக்கப்பட்டும், தோல்வியின் சோர்வையோ, வருத்தமோ சிறிதேனும் தோன்றாத கம்பீரமான, தோற்றத்துடன் வெகு அலட்சியமாக நின்ற குமாரசிம்மனைக் கண்ட செங்கிஸ்கானின் கண்கள் கோபத்தினால் கோவைப் பழம்போல் சிவந்தன. ''வர வேண்டும்! தலைவ! வரவேண்டும். பவானியின் புதல்வ! நாட்டின் வருங்கால இளவரசே! வர வேண்டும்! தங்கள் வரவுக்காகக் காத்திருக்கிறது, அரண்மனை, சிறைச்சாலை, கொலைக்களம் யாவும். சுகம்தானே?'' என்றான் செங்கிஸ்கான் ஏளனமாக! குமாரின் முகம் அலட்சியமாக அவனைப் பார்த்தது.

''மற்றொரு தலைவன் எங்கே? அவனையும் கொண்டு வாருங்கள்!'' என்றான் செங்கிஸ்கான். கல கலவென்று சிரித்தான் குமார சிம்மன். ஆத்திரத்தோடு அவனைப் பார்த்தான் செங்கிஸ்கான். ''ஏன் சிரிக்கிறாய்?''

''செங்கிஸ்கான்! மற்றொருவனைப் பிடிக்க முடியுமா உன்னால்! என்னைப்போன்ற கோழையல்ல, அவன் பெண்களைக் கண்டால் தன் வாளைக் கீழே போட?''

''இழுத்துச் செல்லுங்கள் இவனை. நாளைக் காலையில் பகிரங்கமாகத் தூக்கிலிடுவோம்!'' என்று கட்டளையிட்டான் செங்கிஸ்கான்.

சிறையில் மிருதுவான ஸ்பர்சம் அவனைக் கண் விழிக்கச் செய்தது! உடலெங்கும் வலி. தாங்க முடியாமல் முனகினான் குமாரசிம்மன். கூர்ந்து பார்த்தான். ''ரஸியா, நீயா! ஏன் மறுபடியும் வந்தாய்? வேடத்தை மாற்றிக் கொண்டு என்னைத் இக்பிரமை அடையச் செய்யவா? ரஸியா! போ, போய் விடு! நீ நிற்கும் ஒவ்வொரு கணமும் ஆபத்தாகும், போ!''

''பிரபு, என்னை மன்னியுங்கள்! தந்தையின் மேலுள்ள அன்பினால் அவர் செய்துள்ள அக்கிரமங்களை ஆராயாமல் ஒரு குற்றமும் செய்யாத தங்களைக் கைது செய்ய வந்தேன். ஆனால், அதற்கு நான் வருந்துகிறேன்! தங்கள் மேலுள்ள அன்பு என்னை இழுத்து வந்தது. பிரபு! தாங்கள் இங்கிருந்து உடனே தப்பிவிட வேண்டும்.''

சிரித்தான் குமார். ''ரஸியா, என்னைக் கோழை என்று நினைக்கிறாய்! தவறு ரஸியா! சாவுக்குப் பயந்தவன் ராஜ புத்திர வம்சத்திலேயே கிடையாது. அதைவிட நானை தூக்கு மேடையில் மரணமே மேல்!''

''தங்களால் முடியாதா? பிரபு! அப்படியென்றால் நான் என் கையால் என் உயிரை முடித்துக் கொள்ள வேண்டியதுதான்!''

கையிலிருந்த கத்தியை மார்புக்கு நேராகக் குறி பார்த்து ஓங்கினாள். அதற்குமேல் குமாரசிம்மனால் சும்மா இருக்க முடியவில்லை.

''ரஸியா!'' என்று பதறிய குமார், பாய்ந்து அவளுடைய கையில் இருந்த கத்தியைப் பிடுங்கிக் கொண்டான்.

''பிரபு! சீக்கிரம் புறப்படுங்கள். வெளியே குதிரை ஒன்று காத்துக் கொண்டிருக்கும்! அதில் ஏறி உங்கள் வீரர்களைச் சந்தியுங்கள்!'' என்று அவசரப்படுத்தினாள். குமாரால் ஒன்றுமே பேச முடியவில்லை. உணர்ச்சி தொண்டையை அடைத்தது.

''என்னை மறந்துவிட மாட்டீர்களே?''

''ரஸியா!'' என்று குமாரசிம்மன் அவள் கையைப் பற்றினான். ''முடியாது ரஸியா! மறக்கவே முடியாது. மறக்க முடியாதபடி செய்துவிட்டாய் ரஸியா.''

வெகு வேகமாகச் சென்றான் குதிரையின் இருப்பிடத்தை நோக்கி! அதே சமயம், ''மறக்கவே முடியாது குமாரசிம்மா!'' என்ற கர்ஜனைக் குரல் அவர்களைத் திகைக்கச் செய்தது! திரும்பினான் குமார். அவன் எதிரே செங்கிஸ்கான் நின்று கொண்டிருந்தான். அவன் பின்னே பல வீரர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்களுடைய வேல் குமாரைக் குறி பார்த்தது!

''குமாரசிம்மா! புலியிடம் அகப்பட்ட புள்ளிமான், பாம்பின் வாயில் அகப்பட்ட தவளை தப்பியது உண்டா என்றாவது? இன்று இவன் தப்ப முடியாது. யார் அங்கே? குமார சிம்மனைப் பிடித்துக் கட்டுங்கள். சித்திரவதை செய்யுங்கள்! நாளைக் காலை அவன் தலை வெட்டப்பட வேண்டும்.''

தட தட வென்று வெளியே சென்றான் செங்கிஸ்கான். ரஸியாவின் தலை சுழன்றது. அந்தச் சிறைச்சாலை, படிக்கட்டுகள், வீரர்கள் யாவரும் அவள் முன் சுழன்றன! அப்படியே நினைவிழந்தாள் ரஸியா!

★

ஆழ்ந்த சிந்தனையோடு உலாவிக் கொண்டிருந்தான் ஜெயசிம்மன். குமாரசிம்மனைக் கைது செய்து கொண்டு போனதிலிருந்து அவன் மனம் ஒரு நிலையில் இல்லை. ஒரு பக்கத்தில் அவனுடைய வீரர்கள அனைவரும் கவலை படிந்த முகத்துடன் நின்றுகொண்டிருந்தனர். அச்சமயம் 'சர்'ரென்று வந்து, ஒரு அம்பு தரையில் குத்திட்டு நின்றது. எல்லோரும் பரபரப்படைந்தனர். ஜெயசிம்மன் அந்த அம்பை எடுத்தான். அதில் ஒரு ஓலைச் சுருள் கட்டி இருந்தது.

''நண்பா! உடனே நம் வீரர்களுடன் புறப்பட்டுக் கோட்டையின் கிழக்குப் பாகத்துக்கு வந்து யாருக்கும் தெரியாமல் ஒளிந்து கொள்ளுங்கள். நான் எப்படியும் பாலத்தை அறுத்து விடுகிறேன். சீக்கிரம் புறப்படு. குமாரசிம்மன் ஆபத்தில் இருக்கிறான். காலையில் மரண தண்டனை. பிரபாகரன்.''

கடிதத்தைப் படித்த ஜெயசிம்மன் ஆத்திர மிகுதியால் துடித்தான். நண்பர்களைப் பார்த்தான். ''நண்பர்களே! புறப்படுங்கள். குமாரசிம்மனை விடுவிப்போம். இது நம் தலைவன் பிரபாகரின் உத்தரவு. ஆபத்தில் சிக்கிக் கொண்டார் குமாரசிம்மன். அவருக்கு மரண தண்டனையாம்! புறப்படுங்கள்!''

எல்லோரும் வெளியே பாய்ந்தனர். தத்தம் குதிரைமீது ஏறிக்கொண்டனர். படைகள் வெகு வேகமாகக் கிழக்குக் கோட்டை வாயிலை நோக்கிச் சென்றன. கோட்டை வாயிலை அடையுமுன் சூரியன் கிளம்பும் நேரம். ஜெயசிம்மன் மேலே பார்த்தான். அங்கே பிரபாகரன் நின்றுகொண்டிருந்தான். கையை ஆட்டினான் அவன். 'அங்கேயே இருங்கள்' என்றான் சமிக்ஞையினால். பதுங்கிக் கொண்டனர் அனைவரும்.

கோபுரத்தை நோக்கிச் சென்றான் பிரபாகரன். மெதுவாக அடிமேல் அடி வைத்து யந்திரம் இருக்கும் இடம் சென்றான். அங்கே ஒரு பெரிய உருளையில் பாலத்தின் கயிறு கட்டப்பட்டிருந்தது. மறுகணம் தன் வாளால் கட்டப்பட்டிருந்த கயிற்றை அறுத்து விட்டான். 'தடால்' என்று பாலம் அறுந்தது.

பாலம் அறுந்ததைக் கண்ட காவலாளிகள் அங்கும் இங்கும் ஓடினர். இதைச் சமயமாக உபயோகித்துக் கொண்ட பிரபாகர் வெகு வேகமாகக் கீழே ஓடினான்!

"குமாரசிம்மா! முடிவில் ஏதாவது சொல்ல வேண்டுமா!" என்று கேட்டான் செங்கிஸ்கான்.

"ஒன்றும் தேவையில்லை" என்ற திடமான பதில் அவனிடமிருந்து வந்தது.

"சரி; நடக்கட்டும் கொலை!"

தயாராயினர் கொலையாளிகள். அதே சமயம் "நிறுத்துங்கள்!" என்ற குரல் அவர்களைத் திரும்ப வைத்தது. பிரபாகரன் நின்று கொண்டிருந்தான். திடுக்கிட்டான் செங்கிஸ்கான். "ஏய்! நீ யார்?"

"நானா!" என்றான் பிரபாகரன். "நீ தேடினாயே அதே பிரபாகரன்தான்!"

"பிடியுங்கள் இவனையும்!"

"நெருங்கினால் உயிர் போய் விடும். செங்கிஸ்கான். அதோ பார்" என்றான் பிரபாகரன். திரும்பினான் செங்கிஸ்கான். குதிரைகளின் குளம்படிச் சப்தத்துடன் பல வீரர்கள் வருவது தெரிந்தது!

"செங்கிஸ்கான், அவர்கள் என் வீரர்கள்! ஜாக்கிரதை!" என்ற பிரபாகரசிம்மன் குமாரசிம்மனின் அருகில் ஓடிவந்து, அவனைக் கட்டியிருந்த கட்டுகளை அறுத்தெறிந்தான்.

இதற்குள் ரஜபுத்திரப் படை அவ்விடத்துக்கு வந்து விட்டது. இரு படைகளும் கைகலந்தன. குமாரசிம்மன் தன் வாளுடன் கூட்டத்தினிடையே பாய்ந்தான். பிரபாகரன் தன் நண்பனைப் பின்பற்றிப் போரிட ஆரம்பித்தான்! வெகு உக்ரமாகவே போர் நடந்தது! செங்கிஸ்கான் தன் வாளைக் குமாரசிம்மன் திசையில் திருப்பினான்! குமாரசிம்மன் தன் வாளைச் செங்கிஸ்கானின் திசையில் திருப்பினான். இருவர் வாட்களும் மோதின! முடிவில் செங்கிஸ்கானின் வாள் உடைந்து விட்டது! மன்னனின் அபாயத்தைக் கண்ட ஒரு வீரன் தன் வில்லில் நாணேற்றிக் குமாரசிம்மனைக் குறி பார்த்து அம்பை எய்தான்! தற்செயலாக வந்த பிரபாகரன் இதைப் பார்த்து விட்டான். பாய்ந்தான் குமாரசிம்மனை நோக்கி. வெகு வேகமாக ஓடிவந்த பிரபாகர் குமாரசிம்மனைத் தள்ளினான்! ஆனால் அம்பு குமாரசிம்மனைத் தள்ளிய பிரபாகரனின் விலாவில் பாய்ந்தது! குருதி பெருக்கெடுக்கச் சாய்ந்தான் பிரபாகரன். "பிரபாகர்!" என்றலறிய குமாரசிம்மன் ஓடிவந்து பிரபாகரனைத் தாங்கினான். "பிரபாகர்! மோசம் செய்துவிட்டாயே! இதற்குத்தானா என்னைத் தப்புவித்தாய்! இதற்காகவா இவ்வளவு பாடுபட்டாய்!" என்று அலறினான். அவன் அலறல் அந்தக்களம் முழுவதிலும் பரவியது. குமாரசிம்மனின் குரலைக் கேட்ட ரஸியா ஓடி வந்தாள். அவள் எதிரில் கம்பீரமான தோற்றத்துடன் கூடிய பிரபாகரனின் உருவம் தரையில் கிடந்தது. போர் நின்று விட்டது. அனைவரும் சூழ்ந்து கொண்டனர். மெதுவாகக் கண்களைத் திறந்தான் பிரபாகர்! குமாரசிம்மனைப் பார்த்தான்.

"நான்....நான் கடைசி முறையாக நாட்டின் சுதந்திரக் கொடியை நீ ஏற்றுவதைக் காண வேண்டும் குமாரசிம்மா!"

குமாரசிம்மன் அலறினான்: "பிரபாகர் நீயே நாட்டுப் பற்று மிக்கவன்!" என்ற அவன் கையில் வாளுடன் கோட்டை கொடிக் கம்பத்தின் மீது ஏறினான்.

பிரபாகரனின் இறுதி வேண்டுகோள் ஒவ்வொருவருடைய மனத்திலும் ஆழப்பதிந்தது! நண்பனுக்காகத் தன்னையே தியாகம் செய்த ஒரு வீரனுடைய வேண்டுகோள் இரும்பு நெஞ்சம் கொண்ட செங்கிஸ்கானை மாற்றியது. கீழே விழுந்து கிடந்த மாவீரனைப் பார்த்தான். கொடிக் கம்பத்தின்மீது ஏறிக் கொண்டிருக்கும் வீரனைப் பார்த்தான். அவன் கண்களில் அவனுடைய வாழ்நாளிலேயே முதன் முறையாகக் கண்ணீர் வழிந்தது. சென்றான் பிரபாகரன் அருகில். குழந்தையைத் தூக்குவதுபோலப் பிரபாகரனைத் தூக்கினான். கொடிக் கம்பத்தின் அருகே சென்றான்.

சித்தூரின் சுதந்திரக் கொடி கம்பீரமாக, பிரபாகரனின் கையால், வாழ்நாள் முழுவதும் நண்பனுக்காகவே வாழ்ந்திருந்து, இறுதியில் நண்பன் பொருட்டே பலியான, உற்ற நண்பனின் கையால் வானளாவப் பறந்தது.

"வாழ்க சித்தூர்! ஜெய்பவானி" என்ற கோஷங்கள் வான முகட்டை எட்டின. தாய் நாட்டுக் கொடி வானளாவப் பறக்கும் காட்சியை அண்ணாந்து பார்த்த பிரபாகரனின் வீர ஆன்மா, வான வீதியிலே சென்றது.

இதற்குள் அருகில் வந்தான் செங்கிஸ்கான். பழைய ஆணவம் இல்லை அவன் நடையில். கண்களில் வழியும் நீரைக் கட்டுப்படுத்த முடியாமல் குமாரசிம்மனை நோக்கினான்.

"குமாரசிம்மா! செய்வதற்குப் பயப்படும் படியான பாவங்களைச்செய்த இந்த பாவிக்கு, மன்னிப்பு இந்த ஜன்மத்தில் இல்லை! நான் செய்த அக்கிரமங்களுக்குப் பிராயச்சித்தமே கிடையாது. குமார்! பிரபாகரசிம்மனின் தியாகம் என்னை மனிதனாக்கியது. பிரபாகரனைப் போல் ஒரு சுத்த வீரனைப் பெற்ற, உன்னைப் போல் ஒரு கடமை வீரனைப்பெற்ற, சித்தூரை வெல்ல முடியாது! சுதந்திரமாகவே யிருக்கட்டும் அப்புனித பூமி. மாவீரன் பிரபாகர சிம்மனின் ஆணைப்படி உன் தந்தையின் நாட்டை ஏற்றுக் கொள்! அதோடு உன்னையே நினைந்துருகும் ரஸியாவையும் ஏற்றுக்கொள்! பிரபாகர சிம்மனின் வாழ்வு, அவன் செய்த தியாகம், எல்லோர் மனத்திலும், நிறைந்து தியாகத்தின் சின்னமாக என்றென்றும், இவ்வுலகம் இருக்குமளவும், அழியாது நிலைபெற்று நிற்கட்டும்! சாந்தி யடையட்டும் மாவீரன் பிரபாகரனின் வீர ஆன்மா!" என்று கூறிய செங்கிஸ்கானின் வார்த்தைகள் அனைவரையுமே நெகிழ்ந்துருகச் செய்து விட்டது.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon



# சிசுக்களின் ஆடைகளை லக்ஸ் பத்திரமாகப் பராமரிக்கிறது

குறுநடை பயிலும் குழந்தையிடம் நீடித்த பரிசுத்தத்தை எதிர்பார்க்க முடியாதென்பதை விவேகமுள்ள அன்னை அறிவாள். புத்தம் புதுக் கருக்கான ஆடைகளும் சீக்கிரமே அழுக்காகி விடும்! பரவாயில்லை—மென்மையான லக்ஸ் தூள்களில் நம்பிக்கை வைத்தால், பத்திரமாகத் துணிகளுக்குத் தூய்மையை நீங்கள் மீட்டுக்கொடுக்கலாம்—பச்சிளஞ் சருமத்துக்கு ஏற்றவாறு அவற்றை மழமழப்புடனும் வைத்திருக்கலாம்.

## இலவசம்

"குழந்தைகளின் ஆடைகளைச் சலவை செய்யும் முறை" என்னும் அன்புப் பிரசுரம் இலவசம். லக்ஸ் பெட்டியின் மேல்மூடியிலுள்ள பாப்பா படத்தை "த. பெ. 409, பம்பாய்"க்கு அனுப்புங்கள்.




அழகு மிக்க ஆடைகளுக்கு நெடுங்காலம்
புதுமைத் தோற்றம் அளிப்பது லக்ஸ்

LX. 135-50 TM